ஸ்ரீ :

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்

(அர்த்தத்துடன்)



ஸ்ரீ சந்தான ஸ்ரீனிவாச பெருமாள் - முகப்பேர்

ஸ்ரீ சந்தான ஸ்ரீனிவாச பெருமாள் – முகப்பேர்

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்



தென்திருப்பதி என்று பக்தர்களால் போற்றப்படும்
முகப்பேர் ஸ்ரீ சந்தான சீனிவாச பெருமாள் ஆலயத்தின் முன்பாக
கம்பீரமாக உயர்ந்து நிற்கும் ஐந்து நிலை இராஜ கோபுரம்

ஸ்ரீ :

# ஸ்ரீ சந்தான சீனிவாச பெருமாள் - முகப்பேர் கோவிலின் ஸ்தல வரலாறு

சற்றேறக்குறைய 167 ஆண்டுகளுக்கு முன்பாக முகப்பேர் கிராமத்தின் முன்சீப் ஆக இருந்த திரு.அருணாசல முதலியாருக்குச் சொந்தமான இடத்தில் ஒரு நாள் பெருமாள் கனவில் தோன்றி தான் அங்கு புதையுண்டு இருப்பதாகவும் அதைத் தோண்டி அந்த இடத்திலேயே ஆலயம் அமைக்குமாறும் கூறியுதாக செவிவழிச் செய்தியாக உள்ள தகவலாகும்.

அருணாசல முதலியார் தற்போது கோவில் இருக்கும் இடத்தில் தோண்ட சுமார் 9½ அடி உயரம் கொண்ட அபய ஹஸ்தத்துடன் கூடிய பெருமாள் சிலை கிடைத்தது. சுமார் 6 அடி உயரம் கோவில் வளரும் போது அவர் இயற்கை எய்தினார். அதன் பின் அவர்கள் திருக்குமாரர் திரு. ராஜகோபால் முதலியார் திருப்பணியை தொடர்ந்தார். கோவில் 12 அடி வரை உயர்ந்து சீமை ஓடுகள் வேயப்பட்டன. இக்காலத்தில் புத்திரபாக்கியம் இல்லாத தம்பதியினர் இக்கோவிலுக்கு வந்து பெருமாளை வேண்டி புத்திரபாக்கியம் பெற்றனர், இவரை சந்தான ஸ்ரீனிவாசப் பெருமாள் என்று அழைக்கலாயினர். அதனால் இப்பெருமாளுக்கு இப்பெயர் ஏற்படலாயிற்று. திரு.எம்.எஸ். இராமசந்திர முதலியார் மற்றும் திரு.சாரங்கபாணி முதலியார் அவரும் அவரது குடும்பத்தாரும் சுமார் 50 ஆண்டு காலம் தினசரி தீபம் ஏற்றி கோவில் பணிகளைச் செய்து வந்தனர். 1981 ம் ஆண்டு கோவிலை சுற்றியுள்ள புதர்களை அழித்து மதில் சுவர் எழுப்பப்பட்டது 1993 திரு.எம்.ஆர்.சாரங்கபாணி முதலியார் ஸ்ரீஸந்தான ஸ்ரீனிவாச பெருமாள் பப்ளிக்

சாரிடபுள் டிரஸ்ட்டை ஏற்படுத்தினர். எல்லா சன்னதிகளுக்கும் அர்ச்சகர்கள் நியமிக்கப்பட்டனர். வருடத்தில் லக்ஷார்ச்சனை சனிப்பெயர்ச்சி குருபெயர்ச்சி விழாக்கள் நடைபெறுகின்றன. பக்தர்களுக்கு பெருமாள் அமுது செய்த பிரசாதங்கள் விநியோகிக்கப்படுகின்றது. 1997 ம் ஆண்டு மூலவர் சன்னதிக்கு மேல் விமானம் கட்டப்பட்டு ஸம்ப்ரோக்ஷணம் நடை பெற்றது. 2006 ம் ஆண்டு ராஜகோபுரம் கட்டும் பணி துவங்கியது அத்துடன் அனைத்து சன்னதிகள் முன்பு மகா மண்டபங்கள் கட்டப்பட்டு பளிங்கு தரைகள் பதிக்கப்பட்டன. இந்த அனைத்து திருப்பணிகளும் சென்ற 17 ஆண்டுகளாக ஸ்ரீஸந்தான ஸ்ரீனிவாச பெருமாள் பப்ளிக் சாரிடபுள் டிரஸ்ட்டின் மேற்பார்வையில் நடைபெற்று கடந்த 24.06.2009 அன்று மஹா ஸம்ரோக்ஷணம் நடைபெற்றது.

இவர்களின் காலத்திற்குப் பிறகு இவரது குமாரர் திரு.சாரங்கபாணியின் முதலியாரின் மூத்த மகன் திரு.எம். எஸ். கணேசன் தலைமையில் பணி தொடர்ந்தது.

தற்போது ஸ்ரீஸ்ந்தான ஸ்ரீனிவாச பெருமாள் பப்ளிக் சாரிடபுள் டிரஸ்ட் இத்திருகோவிலை பராமரித்து கொண்டு வருகிறது. அதன் டிரஸ்டிகள் திருவாளர்கள்

M.S. கணேசன் V. வெங்கடேஸ்வரன்
M.S. அப்பாராவ் G. கன்னியப்பன்
M. R. சந்தானம்

அவர்கள் தலைமையில் இந்த திருக்கோவில் மிகவும் சிறப்பாக பக்தர்களும் பொதுமக்களும் பாராட்டும் வகையில் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.



ஸஹஸ்ரநாமம் என்றாலேயே நம் நினைவிற்கு வருவது ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம் தான். வேதங்கள், "தேவோ நாம ஸஹஸ்ரவான்" (ஆயிரம் திருநாமங்கள் உடையநம்பி) என்று ஸ்ரீ மஹாவிஷ்ணுவைப் போற்றுகின்றன, ஆயிரம் என்பது எண்ணிக்கையைக் குறிக்கவந்ததல்ல, எண்ணற்கரியது (Infinity)அளவிடற்கரியது எனும் பொருளில் அமைந்துள்ளது.

தர்மக்ஷேத்ரமான குருக்ஷேத்ரத்தில் மஹாபாரதயுத்தம் 18 நாட்கள் நடந்தது. அதில் ஸ்ரீக்ருஷ்ணனின் அநுக்ரஹத்தால் ஸாத்வீகர்களான பாண்டவர்கள் வென்றனர். நல்விஷயங்கள் பல தெரிந்திருந்தும் மஹாசார்யரான ஸ்ரீபீஷ்மர் கௌரவர்களுக்காக யுத்தம் செய்து அர்ஜுனனால் அடித்து வீழ்த்தப்பட்டார். யுத்தம் முடிந்த பிறகு தர்மபுத்ரர் தனது உறவினர்களையடித்ததால் உண்டான சோகத்தால் மிகவும் வருந்தினார். அவரின் மனக்கலத்தைக் தெளிவிக்க கண்ணன் கருணையுடன் ஸ்ரீ பீஷ்மர் அம்புப்படுக்கையில் வீழ்த்திருக்கும் இடத்திற்கு அழைத்துச் சென்றார்.

அங்கே பீஷ்மர் பலவிதமான தர்மசூட்சுமங்களை தர்மபுத்ரருக்கு உபதேசிக்கிறார். இறுதியில் தர்மபுத்ரர் ஆறுகேள்விகளைக்

கேட்கிறார். அக்கேள்விகளுக்கு விடையாக பீஷ்மர் உபதேசித்ததே "ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்" ஆகும். இது வெறும் ஸ்தோத்ரமாக மட்டுமின்றி நமக்கு ஸகலபலன்களையும் அளிக்கவல்லதாகத் திகழ்கிறது. குறிப்பாக ஆயுர்வேத நூலான சரகஸம்ஹிதை முக்யமான வ்யாதிகளைப் போக்கும் அருமருந்தாக ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ரநாம ஸ்தோத்ரத்தைப் புகழ்கிறது சம்ஸ்ருத இலக்கியங்களிலும், ஆழ்வார்களின் பாசுரங்களிளும் இதன் பெருமை நன்கு விளங்குகிறது. இப்படி சம்ஸார நோய்க்கும் அருமருந்தாக திகழும் இதன் பெருமை அளவிடற்கரியது.

அதன் மகிமைகளை உலகெங்கும் எடுத்துச் சொல்வதற்காக பல பாராயண மண்டலிகள் உலகெங்கும் செயல்ப்படுகின்றன. குறிப்பாக (Chennai Chapter - AIVSCF) இக்கைங்கரியத்தை வெகு சிறப்பாகச் செய்து வருகின்றனர். எல்லோரும் இம்மஹாநிதியை அறியவேண்டும் என்பதற்காக தற்போது அர்த்தத்துடத்துடன் ஒரு புத்தகத்தையும் வெகு அழகாக அச்சிட்டு வெளியிடுகின்றனர். இதைப்பாராயணம் செய்து அனைவரும் எல்லா க்ஷேமங்களையும் பெறவேண்டுமாக எம்பெருமானை ப்ரார்த்தித்துக்கொள்கிறோம்.

எங்கும் திருவருள் பெறுக

அன்புடன்

16, ஸ்ரீ அகோபிலம்
தேவநாதன் காலனி
மேற்கு மாம்பலம்
சென்னை 33



# கண்ணன் காட்டிய வழி

இறைவன் படைப்பினில் நான்கு யுகங்களாக படைத்தான் முறையே கிருத த்ரேதா துவாபர கலி என்று. கலியுகமே மிகக்குறைந்த கால அளவு உடையது. க்ருத யுகத்தில் தியானத்தாலும் த்ரேதா யுகத்தில் யாகங்கள் மூலமும் துவாபர யுகத்தில் வழிபடுதல் மூலமும் எந்த ஒரு பலனை மனிதன் அடைந்தானோ அதனை கலியுகத்தில் சரணாகதி மூலமோ அன்றி நாம ஸ்மரணத்தினாலோ அந்த பலனை அடையலாம் என்று நம் முன்னோர்கள் எடுத்து காட்டி உள்ளனர்.

எடுத்துக்காட்டாக ஐந்து வயதே நிரம்பிய பாலகன் துருவன் தன் தந்தையின் மடியில் உட்காரும் தகுதியை பெறுவதற்காக காட்டிற்கு சென்று நாராயணன் நாமத்தை ஜபித்து அவன் அருளை பெற்றான். முடிவில் அவன் துருவ பதவியையும் கிடைக்க பெற்றான், சிறுவன் பிரகலாதன் ஸ்ரீமன் நாராயணின் நாமத்தை ஜபித்ததின் மூலமே தன் தந்தை அளித்த கொடிய தண்டனையில் இருந்து விடுவிக்கப்பட்டான். மேலும் அவன் வாக்கை காக்கும் பொருட்டு பகவான் இரணியகசிபு காட்டிய தூணில் இருந்து க்ஷண நேரத்தில் நரசிம்மமாக வெளிப்பட்டு இரணிகசிபுவை கொன்று பிரகலாதனுக்கு வாக்களித்தார், இனி உன் குலத்தில் யாரையும் நான் கொல்ல மாட்டேன் என்று. அனுமனும் இலங்கையை அடைய கடலை கடக்க தயங்கிய சமயம் ராமநாமத்தை ஜெபித்தே கடலை தாண்டினார். ஆக, "நாமியை விட நாமத்திற்கே மகிமை" என்று நம் முன்னோர் எடுத்து காட்டி உள்ளனர்

பாரத போர் முடிவில் தருமன் கலங்கி இருந்த சமயம் ஸ்ரீகிருஷ்ணன் அவரை அம்பு படுக்கையில் இருந்த பிதாமகர் பீஷ்மர் முன் கொண்டு நிறுத்தினார், தருமர் பிதாமகரிடம் தன் உளைச்சலைக் கூறும் தருணத்தில் எது சிறந்தது என்றும் எந்த ஒரு ஜீவன் எதை ஜபித்தால் பிறப்பு வாழ்வு இதில் இருந்து விடுபட

முடியும் என்று கேட்க, பீஷ்மரும் அதற்கு உலக நாயகனும் ஆதியும் அந்தமும் அற்ற அனைத்து உலகுற்கும் அதிபதியுமான புருஷோத்தமனின் ஆயிரம் நாமங்களை ஜபிப்பதே அனைத்து தருமங்களிலும் சிறந்தது என்று கூறி ஸ்ரீவிஷ்ணு சகஸ்ர நாமத்தையும் அதன் அர்த்தத்தையும் எடுத்து கூறினார். ஸ்ரீ கிருஷ்ணனை சாட்சியாக வைத்து கூறப்பட்டதே இதன் சிறப்பாகும் ராமானுஜர் சங்கரர்,மத்வர், போன்ற சமய அறிஞர்களும் இதற்கு விரியுரை எழுதியுள்ளனர், ஸ்ரீ ஆதிசங்கரர் தமது பஜகோவிந்ததில்

Dhyeyam gitaaa naama sahasram,
Dhyeyam sripathi ruupa majasram,
Neyam sajjana sange chittam,
Deyam dina janaayacha vittam

என்று அவர் கூறி கீதையினை பாராயணம் செய்வதோடு விஷ்ணு சகஸ்ரநாமபாராயணத்தை செய்ய வேண்டும் என்பதை வலியுறுத்தி இருக்கின்றார்.

இந்த விஷ்ணு சகஸ்ரநாமத்தை ஜபிக்க காலமே நேரமோ, ஆச்சார அனுஷ்டானமோ எதுவும் தேவையில்லை என்பது நம் முன்னோர்களின் கருத்து. எனவே, சாதாரண மக்களும் விஷ்ணுவின் நாமத்தை அர்த்தத்துடன் தெரிந்து பாராயணம் செய்து ஸ்ரீமன் நாராயணனின் அருளை பெற்று நற்பயன் பெற வேண்டும் என்பதே இந்நூலின் கருத்து. இதில் ஏதேனும் குறை தவறு இருப்பின் அது என் தவறே, என் குறையே என கூறி எல்லாம் வல்ல ஸ்ரீமன் நாராயணனை உளம்கனிந்து உருகி வணங்குகின்றேன். இந்நூலை வெளியிடுவதற்கு எல்லா உதவிகளையும் அளித்த ஸ்ரீ சந்தானசீனிவாச பெருமாள் பப்ளிக் சாரிடபுள் டிரஸ்ட்ற்கு உளமார்ந்த நன்றியினை தெரிவிப்பதோடு அவர்களின் நற்பணி மேலும் மேலும் தொடர ஸ்ரீமன் நாராயணனின் அருள் அவர்களுக்கு கிடைக்க பிரார்த்தித்து ஸ்ரீமன் நாராயணனின் பாதார விந்தங்களில் இந்நூலை சமர்ப்பிற்கின்றேன்.

P.T. கோபாலகிருஷ்ணன்
Additional Secretary
Chennai Chapter (AIVSCF)

முதல் பதிப்பு
டிசம்பர் 2010

# OM NAMO NARAYANA

The Chennai Chapter of All India Vishnu Sahasranama Cultural Federation was Launched on 5th November 2006. It is the outcome of a long desire and dream of many Saharasanama Mandalis of Chennai Devotees.

Lord Sri Balaji has fulfilled our long time dream through Sri Meenakshi Sundaram of Sri Krishnamasamy kalyana Mandapam, who has offered the Mandapam free of cost as the venue for the grand occasion and continues to offer for our annual mass chanting every year and Sri.Ramakrishnan of Sarojini Street, T.Nagar.

We all know the importance of Chanting Sri Vishnu Sahasranamam, Our Acharyas / Elders used to advise that in Kaliyuga Namasankeerthanam (Sri Vishnu Sahasranamam) is the only way to attain **Moksha** . Keeping this in mind the Chennai Chapter is trying its level best to create opportunities for the devotees to chant Vishnu Saharasanamam. We conduct Mass chanting in the month of December every year wherein members of about 55 Mandalies in and around chennai and large number of Mandalies from various parts of the country use to participate. Totally around 1000 to 1200 devotees use to participate every year. We also conduct Sri Lalitha Saharasanama Parayanam once in a year in the same venue wherein members of all Chennai Mandalis use to participate.

We conduct meeting of all mandali members every year to ascertain their views and suggestions with regard to the functioning of the Chennai Chapter and also to nominate office bearers of the Chennai Chapter.

Following are the Office bearers of Chennai Chapter

Shri / Smt

1. T.J. Sridharan, President
2. V. Krishnamoorthy , Secretary
3. A.V Jayaraman, Advisor

4. R.Thyagarajan, Advisor
5. K.S. Ramesh, Treasurer
6. Latha Ramanujam, Vice President
7. P.T.Gopalakrishnan, Additional Secretary
8. R. Srikanth, Joint secretary

The main objectives of our Chennai Chapter are:

1. To arrange Mass chanting of Sri Vishnu Saharasanamam, once in a year.
2. To assist any Individual / Mandalis / Institution etc. for chanting
3. To support our Federation in its Chennai activities

Sriman Narayanan through all of us made it more easy for doing the above more than what we expected. During these years, many joined us in strengthening our mission in particular Sri Murali of Sri Krishna Sweets and Sri V. Venkateswaran, Trustee of Sri Santhana Srinivasa Perumal public chartiable Trust.

To day we are releasing **"HIS"** Divya Nama Book with Tamil meaning. Again the long desire of many devotees to know about "HIS" Divyanamam is getting fulfilled. This book is sponsored by "Sri Santhana Srinivasa Perumal Public Chartiable Trust, Mugappair. Our sincere thanks to Sri. V. Venkateswaran, Trustee.

We are proud to say that the CHENNAI CHAPTER is an Organisation/ Mission with no Registration / Membership Fees and above caste / creed / religion as we all know that chanting **"HIS"** name needs only **"HIS" blessings and nothing** else.

We pray "HIM" to give us more Strength/ Unity to continue our mission for "Logakshemam"

T.J SRIDHARAN
PRESIDENT
CHENNAI CHAPTER (AIVSCF)
97909 25804

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

## ஹரி : ஓம்

1. சுக்லாம் பரதரம் விஷ்ணும்
சசிவர்ணம் சதுர்புஜம்
ப்ரஸன்ன வதனம் த்யாயேத்
ஸர்வ விக்னோபசாந்தயே

2. யஸ்ய த்விரதவக்த்ராத்யா
பாரிஷத்யா பரஸ்ஸதம்
விக்நம் நிக்நந்தி ஸததம்
விஷ்வக்ஸேநம் தமாஸ்ரயே

3. வ்யாஸம் வஸிஷ்ட நப்தாரம்
சக்தே: பௌத்ர மகல்மஷம் ।
பராசராத் மஜம் வந்தே
ஸுகதாதம் தபோநிதிம் ॥

## ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரம்

## தெளிவுரை

1. வெண்மை ஆடை உடுத்துபவரும் எங்கிலும் நிறைந்து விளங்குபவரும் நிலவின் நிறமுள்ளவரும் நான்கு கைகள் உள்ளவரும் மகிழ்ச்சி ததும்பும் முகமுடையவரும் ஆகியவரை அனைத்து இடர்களும் விலகும் பொருட்டு தியானிக்க வேண்டும்.

2. எவருக்கு கஜானனன் முதலான நூற்றுகணக்கான சேவகர்கள் உள்ளனவோ, பகவான் விஷ்ணுவின் படைத்தலைவரான அந்த சேனை முதலியாரை தடைகள் நீங்கும் பொருட்டு துதிக்கிறேன்.

3. வஸிஷ்டருடைய கொள்ளுப் பேரரும், சக்தியின் பேரரும் பராசரரின் மைந்தனும் சுகருடைய தந்தையும் மாசற்ற தவச்செல்வரும் ஆகிய வியாஸரை வணங்குகிறேன்.

4. வ்யாஸாய விஷ்ணு ரூபாய
வ்யாஸ ரூபாய விஷ்ணவே ।
நமோ வை ப்ரஹ்ம நிதயே
வாஸிஷ்டாய நமோ நம: ॥

5. அவிகாராய ஸுத்தாய
நித்யாய பரமாத்மனே ।
ஸதைகரூப ரூபாய
விஷ்ணவே ஸர்வஜிஷ்ணவே ॥

6. யஸ்ய ஸ்மரணமாத்ரேண
ஜன்ம ஸம்ஸாரபந்தனாத் ।
விமுச்யதே நமஸ்தஸ்மை
விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே ॥

(ஓம் நமோ விஷ்ணவே ப்ரபவிஷ்ணவே )

4. விஷ்ணுவின் உருவாகிய வியாஸருக்கு வியாஸரின் உருவாகிய விஷ்ணுவிற்கு பிரம்மன் பற்றிய அறிவுச் செல்வருக்கு வஸிஷ்ட வழித்தோன்றலுக்கு வணக்கம் வணக்கம்.

5. மாறுபாடு இல்லாதவருக்கு தூயவருக்கு என்றும் இருப்பவருக்கு பரமாத்மாவாய் விளங்குபவருக்கு எப்போதும் ஒரே வடிவினராய் இருப்பவருக்கு எங்கும் நிறைந்திருப்பவருக்கு அனைத்தையும் வெற்றி கொள்பவருக்கு வணக்கம்.

6. எவரை நினைத்தவுடனேயே பிறப்பு வாழ்க்கை ஆகிய தளையினின்றும் ஒருவன் விடுவிக்கப்படுவானோ அந்த விஷ்ணுவிற்கு சர்வ வல்லமையுடையவருக்கு வணக்கம்.

(ஓம் எங்கும் நிறைந்திருப்பவருக்கு
சர்வ வல்லமையுடையவருக்கு வணக்கம் )

ஸ்ரீ வைஸம்பாயன உவாச

7. ஸ்ருத்வா தர்மாந ஸேஷேண
பாவநாநி ச ஸர்வச: ।
யுதிஷ்ட்டிர: ஸாந்தனவம்
புனரே வாப்யபாஷத ॥

யுதிஷ்டிர உவாச

8. கிமேகம் தைவதம் லோகே
கிம் வாப்யேகம் பராயணம் ।
ஸ்துவந்த:கம் கமர்ச்சந்த:
ப்ராப்னுயுர் மானவா: சுபம் ॥

9. கோ தர்ம: ஸர்வதர்மாணாம்
பவத: பரமோ மத: ।
கிம் ஜபந் முச்யதே ஜந்துர்
ஜன்ம ஸம்ஸார பந்தனாத் ॥

ஸ்ரீ பீஷ்ம உவாச

10. ஜகத் ப்ரபும் தேவதேவம்
அனந்தம் புருஷோத்தமம் ।
ஸ்துவந்நாம ஸஹஸ்ரேண
புருஷ: ஸததோத்தித : ॥

ஸ்ரீ வைசம்பாயனர் ( ஜனமேஜயரிடம் ) கூறினார்

7. தூயவையானவும் மீதம் எதுவும் இல்லாதவையும் ஆகிய அறங்களை முழுமையாகக் கேட்டபின்னர், யுதிஷ்டிரர் சந்தனுவின் வழித் தோன்றலை பீஷ்மரை மீண்டும் வினவினார்

யுதிஷ்டிரர் சொன்னார்:

8. உலகில் ஒன்றே ஆகிய தெய்வம் எது? ஒரே புகலிடம் எது எவனைத் துதித்தும் வழிபட்டுப் போற்றியும் மாந்தர் உயர்நலம் பெறுவர்.

9. அனைத்து தருமங்களிலும் எந்த தருமம் சிறந்த தருமமாக உங்களுக்குத் தோன்றுகிறது ? பிறவி எடுத்த பிராணி எதனை ஜபித்தால் பிறப்பு வாழ்வு ஆகிய தளையினின்றும் விடுவிக்கப்படும்

பீஷ்மர் சொன்னார்:

10 உலக நாயகனும் முடிவற்றவனும் ஆகிய
புருஷோத்தமனை புருஷர்களின்
தலையாயவனை ஆயிரம் நாமங்களினால்
பெயர்களினால் இடையுறாது போற்றியும்

11. தமேவ சார்சயந்நித்யம்
பக்த்யா புருஷ மவ்யயம் ।
த்யாயந் ஸ்துவந் நமஸ்யம்ஸ்ச
யஜமான ஸ்தமேவ ச ॥

12. அநாதி நிதனம் விஷ்ணும்
ஸர்வலோக மஹேஸ்வரம் ।
லோகாத்யக்ஷம் ஸ்துவந்நித்யம்
ஸர்வது: க்காதிகோ பவேத் ॥

13. ப்ரஹ்மண்யம் ஸர்வதர்மஜ்ஞம்
லோகானாம் கீர்த்தி வர்த்தனம் ।
லோகநாதம் மஹத்பூதம்
ஸர்வபூத பவோத்பவம் ॥

14. ஏஷ மே ஸர்வ தர்மாணாம்
தர்மோSதிகதமோ மத: ।
யத்பக்த்யா புண்டரீகாக்ஷம்
ஸ்தவைரர்சேந் நரஸ்ஸத ॥

11. அழிவற்ற அப்புருஷனை எப்போதும் பக்தியுடன் போற்றியும் அவனையே தியானித்தும் புகழ்ந்தும் வணங்கியும் வழிபடும் தலைமகன்.

12. முதலும் முடிவுமில்லாதவனை எங்கும் நிறைந்திருப்பவனை அனைத்து உலகுகளுக்கும் அதிபதியானவனை உலகின் தலைவனை எப்போதும் போற்றிக்கொண்டு அனைத்துத் துன்பங்களையும் கடந்து விடுகின்றான்.

13. தவத்தின் புரவலனும் அனைத்துத் தருமங்களை அறிந்தவனும் உலகங்களின் புகழைப் பெருக்குபவனும் உலகின் தலைவனும் மிகச்சிறந்தவனும் அனைத்துப் படைப்பிற்கும் காரணமானவனும் ஆகியவனை (எப்போதும் போற்றிக் கொண்டு அனைத்துத் துன்பங்களையும் கடந்து விடுகின்றான்).

14. தாமரைக் கண்ணனை எப்போதும் பக்தியுடன் ஒரு மனிதன் துதிகளால் போற்றுகிறானோ அதுவே அனைத்துத் தருமங்களிலும் மிகச் சிறந்தது என்பதே எனது கொள்கை.

15. பரமம் யோ மஹத் தேஜ:
பரமம் யோ மஹத்தப : ।
பரமம் யோ மஹத் ப்ரஹ்ம
பரமம்ய: பராயணம் ॥

16. பவித்ராணாம் பவித்ரம் யோ
மங்களானாம் ச மங்களம் ।
தைவதம் தேவதானாம் ச
பூதானாம் யோSவ்யய:பிதா ॥

17. யத : ஸர்வாணி பூதாநி
பவந்த்யாதி யுகாகமே ।
யஸ்மிம்ஸ்ச ப்ரளயம் யாந்தி
புனரேவ யுகக்ஷயே ॥

18. தஸ்ய லோக ப்ரதானஸ்ய
ஜகந்நாதஸ்ய பூபதே ।
விஷ்ணோர் நாம ஸஹஸ்ரம் மே
ஸ்ருணு பாப பயாபஹம் ॥

19. யாநி நாமானி கௌணானி
விக்யாதானி மஹாத்மன: ।
ருஷிபி: பரிகீதானி
தாநி வக்ஷ்யாமி பூதயே ॥

15. எது மிகச்சிறந்ததான ஒளியோ எது மிகச்சிறந்ததான தவமோ எது மிகச்சிறந்ததான பிரம்மமோ எது மிக உயர்ந்த குறிக்கோளோ

16. எது தூயவற்றுள் மிகச்சிறந்த தூயதோ எது மங்களமானவற்றுள் மிகச்சிறந்த மங்களமோ (அப்பரம் பொருள் ஓரே புகலிடம்) எவன் தேவதைகளுக்குள் தேவதையாகவும் படைக்கப்பட்டவற்றுள் அழிவற்ற ஆதி தந்தையாகவும் உளனோ

17. எவனிடமிருந்து அனைத்து உயிர்களும் ஆதியுகத்தின் தொடக்கத்தில் உண்டாகின்றனவோ எவனிடத்தில் யுகத்தின் இறுதியில் மீண்டும் இலயமடைகின்றனவோ

18. அந்த உலகின் உயர் தலைவனான பிரபஞ்சத்திற்கு அதிபதியான விஷ்ணுவின், பாவங்களின் பயத்தை அகற்றும் ஆயிரம் பெயர்களை அரசனே என்னிடமிருந்து கேட்பாயாக

19. மஹாத்மாவான பரம்பொருளின் குணங்கள் சார்ந்த பிரசித்தியான பெயர்களை முனிவர்களால் இசைக்கப்படும் பெயர்களை மேன்மை பெறுவதன் பொருட்டு (உனக்கு)ச் சொல்லுகிறேன்

20. ரிஷிர் நாம்நாம் ஸஹஸ்ரஸ்ய
வேதவ்யாஸோ மஹாமுனி : ।
சந்தோனுஷ்டுப் ததா தேவோ
பகவான் தேவகீஸுத: ॥ 20

21. அம்ருதாம் சூத்பவோ பீஜம்
சக்திர் தேவகிநந்தன: ।
த்ரிஸாமா ஹ்ருதயம் தஸ்ய
சாந்த்யர்த்தே வினியுஜ்யதே ॥

22. விஷ்ணும்ஜிஷ்ணும் மஹாவிஷ்ணும்
ப்ரபவிஷ்ணும் மஹேச்வரம் ।
அநேகரூப தைத்யாந்தம்
நமாமி புருஷோத்தமம் ॥

## பூர்வபாகம் - இரண்டு

அஸ்ய ஸ்ரீ விஷ்ணோர் திவ்ய ஸஹஸ்ரநாம
ஸ்தோத்ர மஹாமந்த்ரஸ்ய ।
ஸ்ரீ வேதவ்யாஸோ பகவான் ரிஷி:
அனுஷ்டுப்ச் சந்த: ஸ்ரீ மகாவிஷ்ணு: ।
பரமாத்மா ஸ்ரீமந் நாராயணோ தேவதர
அம்ருதாம் சூத்பவோ பானுரிதி பீஜம் ॥

20. ஸஹஸ்ரநாம (தோத்திர) த்திற்கு ரிஷி மகாமுனிவரான வேத வியாஸர் சந்தம் (யாப்பு) அநுஷ்டுப் தேவதை தேவகியின் மைந்தனான பகவான்.

21. தண்கதிர்திங்களின் மூலம் (சூரியன்) விதை, தேவகியை மகிழ்விப்பவன் (கிருஷ்ணன்) சக்தி, அதன் இதயம் ஸாம வேதத்தினால் போற்றிப் புகழப்படுபவன் (திரிஸாமா) (நோக்கம்) அமைதியின் பொருட்டுப் பயன் படுத்தப்படுகின்றது.

22. எங்கும் வியாபித்திருப்பவனும் வெற்றி கொள்பவனும் எல்லாவற்றினுள்ளும் உறைபவனும் அனைத்திற்கும் அதிபதியாயிருப்பவனும் பல வடிவங்கள் கொண்ட அசுரர்களின் முடிவு காண்பவனும் மிக உயர்ந்த புருஷனுமான விஷ்ணுவை வணங்குகிறேன்.

## முற்பகுதி இரண்டு

ஸ்ரீவிஷ்ணுவின் இந்த ஸஹஸ்ரநாம ஸ்தோத்திரமாகிய மஹா மந்திரத்திற்கு பகவான் வேதவியாஸர் ரிஷி சந்தம் (யாப்பு) அநுஷ்டுப், ஸ்ரீமஹாவிஷ்ணுவும் பரமாத்மாவும் ஆகிய ஸ்ரீமந்நாராயணன் தேவதை தண்கதிர்த் திங்களின் மூலமான சூரியன் விதை

தேவகீநந்தன: ஸ்ரஷ்டேதி சக்தி ஹி ।
உத்பவ : க்ஷோபணோ தேவ இதி
பரமோ மந்த்ரஹ ।
ஸங்கப்ருந்நந்தகீ சக்ரீதி கீலகம் ।
சார்ங்கதன்வாகதாதர இத்யஸ்த்ரம் ।

ரதாங்க பாணி ரக்ஷோப்ய இதி நேத்ரம் ।
த்ரிஸாமா ஸாமக: ஸாமேதி கவசம்:॥

ஆனந்தம் பரப்ரஹ்மேதி யோனி:।
ருதுஸ் ஸுதர்சன: கால இதி
திக்பந்தஹ ।
ஸ்ரீ விச்வரூப இதி த்யானம் ।
ஸ்ரீ மஹாவிஷ்ணு ப்ரீத்யர்த்தே ஸஹஸ்ரநாம
ஜபே வினியோக: ॥

தேவகியை மகிழ்விப்பவனும் அனைத்தையும் படைப்பவனுமானவன் சக்தி ஆக்குபவன் ஜீவராசிகளை தூண்டுபவன் தேவன் என்பது மிகவும் உயர்ந்ததான மந்திரம் என்பது மையம் சார்ங்கம் (வில்) உடையவன் கதி தரித்திருப்பவன் என்பது அஸ்த்ரம் ( மந்திரத்தினால் செயல்படும் அம்பு)

ரதத்தைச் செலுத்துபவர் என்பது கண், மூன்று ஸாமங்களால் புகழப்படுபவரும், ஸாமவேதத்தை இசைப்பவரும் ஆன தேவதை கவசம்

மகிழ்ச்சியே உருவான பரப்பிரும்மம் கருக்குழி சுதர்சன சக்ரம் மற்றும் திரும்பத்திரும்ப வரும் காலம் என்றவாறு திசைகளின் காப்பு எங்கும் நிறைந்திருப்பவன் எனத் தியானம், மகாவிஷ்ணுவின் மகிழ்ச்சியின் பொருட்டு விஷ்ணுவின் ஆயிரம் திருநாமங்களின் ஜபம் (ஒருமித்த மனத்துடன் சிந்தித்தல்) பயன்படுத்தப்படுகின்றது.

## || த்யாநம் ||

1. க்ஷீரோத்நவத்ப்ரதேசே சுசிமணி
விலஸத் ஸைகதேர் மௌக்திகாநாம் |
மாலாக்லுப்தா ஸனஸ்த்தஸ் ஸ்படிக
மணி நிபைர் மௌக்திகைர் மண்டிதாங்கஹ: ||
சுப்ரை ரப்ரை ரதப்ரை : ருபரி
விர சிதைர் முக்தபீயூஷ வர்ஷை: |
ஆனந்தீ ந:புனியாதரி
நளின கதாஸாங்கபாணிர் முகுந்தஹ || 1

2. பூ: பாதௌ யஸ்ய நாபி: வியதஸு
ரநிலஸ் சந்த்ரஸூர்யௌ ச நேத்ரே |
கர்ணாவாசா : ஸிரோ த்யௌர்முகமபி
தஹனோ யஸ்ய வாஸ்தேயம்ப்திஹி |
அந்தஸ் ஸ்த்தம் யஸ்ய விஸ்வம் ஸுரநர
ககபோ போகி கந்தர்வ தைத்யை:
சித்ரம் ரம் ரம்யதே தம் த்ரிபுவன
வபுஷம் விஷ்ணுமீசம் நமாமி ||

( ஓம் நமோ பகவதே வாஸுதேவாய )

3. சாந்தாகாரம் புஜகஸயனம்
பத்மநாபம் ஸுரேசம்
விஸ்வாதாரம் ககன ஸத்ருசம்
மேகவர்ணம் சுபாங்கம்|
லக்ஷ்மீகாந்தம் கமலநயனம்
யோகி ஹ்ருத்யாந கம்யம்
வந்தே விஷ்ணும் பவபயஹரம்
ஸர்வ லோகைகநாதம்|| 3

## உள்ளத்தில் உருவத்தை அமைத்துத் தியானித்தல்

1. உயரிய இரத்தினங்களால் ஒளிரும் பாற்கடல் பிரதேசத்தில் முத்துமாலைகளாலான ஆ ச ன த் தி ல் அமர்ந்திருப்பவரும் படிகமணிகளை ஒத்த முத்துக் களினால் அலங்கரிக்கப்பட்ட அங்கங்களையுடைய வரும் மேலே உள்ள தூய வெண்முகில்களின் அமுதப் பொழிவுகளினால் மகிழ்ந்திருப்பவரும் சக்கரம் தாமரை கதை சங்கு ஆகியவற்றைக் கைகளில் கொண்டிருப்பவரும் ஆன முகுந்தன் நம்மைப் புனிதமாக்கட்டும்.

2. எவருக்குப் பூமி பாதங்களாகவும் வானம் உந்தியாவும் வாயு பிராணனாகவும் சந்திர சூரியர்கள் கண்களாகவும் திசைகள் செவிகளா கவும் தேவர்களின் உலகு தலையாகவும், அக்கினி வாயாகவும் (முகமாகவும்) சமுத்திரம் அடிவயிறாகவும் அமைந்துள்ளனவோ எவருள் பலவகைத் தேவதைகளும் மனிதர்களும் புள்ளினங்களும் விலங்குகளும் நாகர் கந்தர்வர் அசுரர் ஆகியவர்களும் விளையாடி மகிழ்கின்றரோ அந்த மூவுலகினையும் உடலாய்க்கொண்ட விஷ்ணுவை வணங்குகிறேன்

(ஓம் வாசுதேவராகிய பகவானுக்கு வணக்கம்)

3. அமைதியான வடிவுடையவரும், பாம்பணை மீது படுத்திருப்பவரும், உந்தியில் மலர்ந்த தாமரையுடன் விளங்குபவரும் தேவர்களின் தலைவரும் பிரபஞ்சத்திற்கு (அனைத்து உலகிற்கு) ஆதாரமாய் (பிரபஞ்சத்தின் உருவாய்) இருப்பவரும் வானத்தை ஒத்தவரும் முகில் வண்ணனாய் அழகிய அங்கங்களையுடையவரும், லக்ஷ்மியின் நாயகனும் தாமரைக்கண்ணனும் யோகியரின் இதயத்தின் தியானத்தினால் அடையப்பெற்று நிலைத்திருப்பவரும் பிறவித்துயரை போக்குபவரும் அனைத்து உலகங்களுக்கும் ஒரே தலைவனாய் இருப்பவருமான விஷ்ணுவை வணங்குகிறேன்

4. மேகஸ்யாமம் பீதகௌசேயவாஸம்
ஸ்ரீ வத்ஸாங்கம் கௌஸ்துபோத்பாஸி தாங்கம் ।
புண்யோபேதம் புண்டரீகாயதாக்ஷம்
விஷ்ணும் வந்தே ஸர்வலோகைக நாதம் ॥

( நமஸ்ஸமஸ்த பூதானாமாதி பூதாய பூப்ருதே ।
அநேகரூபரூபாய விஷ்ணவே ஸர்வ ஜிஷ்ணவே ॥ )

5. ஸசங்கசக்ரம் ஸகிரீட குண்டலம்
ஸபீதவஸ்த்ரம் ஸரஸீருஹேக்ஷணம் ।
ஸஹாரவக்ஷஸ்தல சோபிகௌஸ்துபம்
நமாமி விஷ்ணும் ஸிரஸா சதுர்புஜம் ॥ 5

6. ச்சாயாயம் பாரிஜாதஸ்ய
ஹேமஸிம்ஹாஸனோபரி ।
ஆஸீனமம் புதச்யாமம்
ஆயதாக்ஷ மலங்க்ருதம் ॥ 6

7. சந்த்ரானனம் சதுர்பாஹும்
ஸ்ரீ வத்ஸாங்கித வக்ஷஸம் ।
ருக்மணீ ஸத்யபாமாப்யாம்
ஸஹிதம் க்ருஷ்ணமாச்ரயே ॥ 7

( ஓம் விச்வஸ்மை நம : )

4. மேகம் போல் கரியவராயிருப்பவரும் மஞ்சள்நிற ஆடை உடுத்தியிருப்பவரும் ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவினை அடையாளமாகக் கொண்டவரும் கௌஸ்துபம் என்னும் மணியின் ஒளியினால் ஒளிரும் அங்கங்களை உடையவரும் புண்ணியமானவர்களினால் சூழப்பெற்றவரும் மலர்ந்த வெண்தாமரை போன்ற கண்களை உடையவரும் அனைத்து உலகுகளுக்கும் ஒரே நாயகனுமான விஷ்ணுவை வணங்குகிறேன் அனைத்துப் பொருள்களுக்கும் ஆதியாய் பூமியினைத் தாங்குபவராய் பல்வேறு வடிவங்கள் கொண்ட உருவினராய் பிரபுவாய் உள்ள விஷ்ணுவிற்கு வணக்கம்

5. சங்கு சக்கரம் ஆகியவற்றோடு கூடியவரும், கிரீடம் குழை (காதணி)கள் ஆகியவற்றுடன் கூடியவரும் மஞ்சள் ஆடையுடன் கூடியவரும் தாமரை மலரினை ஒத்த கண்களுடன் (பார்வையுடன்) கூடியவரும் மாலையுடன் விளங்கும் மார்பினனில் ஒளிவீசும் கௌஸ்துப மணியுடன் கூடியவரும் நான்கு கைகளுடன் இருப்பவருமான விஷ்ணுவை தலையினால் (தலைகுனிந்து) வணங்குகிறேன்

6. பாரிஜாத மரத்தின் நிழலில் தங்க அரியணையின் மேல் அமர்ந்துள்ளவரும் நீருண்ட மேகம் போன்ற நிறத்தவரும் நீண்டகன்ற கண்களை உடையவரும் அணி மணிக்ளினால் அலங்கரிக்கப் பெற்றவரும்

7. சந்திரனை ஒத்த முகத்தவரும் நான்கு கைகளுடன் விளங்குபவரும் ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவினை மார்பினில் அடையாளமாகக் கொண்டவரும் ருக்மணி சத்தியபாமை ஆகிய இருவருடன் இணைந்திருப்பவருமான கிருஷ்ணனைப் புகலகைடகின்றேன்

(ஓம் அனைத்துலகும் தாமாகவே ஆகியவருக்கு வணக்கம்)

# ஸ்தோத்ரம்

1. ஓம் விச்வம் விஷ்ணுர் வஷட்காரோ
பூதபவ்ய பவத் ப்ரபு: ।
பூதக்ருத் பூதப்ருத் பாவோ
பூதாத்மா பூதபாவன:॥

2. பூதாத்மா பரமாத்மா ச
முக்தானாம் பரமாகதி:।
அவ்யய: புருஷ: ஸாக்ஷீ
க்ஷேத்ரக்ஞோऽக்ஷர ஏவ ச॥

3. யோகோ யோகவிதாம் நேதா
ப்ரதான புருஷேச்வர: ।
நாரஸிம்ஹவபுஸ் ஸ்ரீமான்
கேசவ : புருஷோத்தம: ॥

4. ஸர்வ: சர்வ சிவ :
ஸ்தாணுர் பூதாதிர் நிதிரவ்யய:।
ஸம்பவோ பாவனோ பர்த்தா
ப்ரபவ : ப்ரபுரீச்வர : ॥

## ஸ்தோத்ரம்

1. உலகனைத்தும் தாமாக விளங்குபவர் எங்கும் நிறைந்தும் பரந்தும் இருப்பவர். வேள்வி வடிவானவர். கடந்த காலம் வருங்காலம் நிகழ்காலம் ஆகிய முக்காலத்திற்கும் அதிபதி. பிரபஞ்சத்தில் உள்ளவை அனைத்தையும் ஆக்கியவர். பிரபஞ்சத்தில் உள்ள அனைத்தையும் தாங்குபவர். அனைத்திற்கும் இருப்பாக உள்ளவர். படைக்கப்பட்ட அனைத்திற்கும் ஆன்மாவாக இருப்பவர். ஆக்கியவை அனைத்தையும் ஊட்டமளித்து வளர்ப்பவர்.

2. பற்றில்லாதவர் (தூய இயல்பினர்) எல்லாவற்றினுள்ளும் இருந்தும் எல்லாவற்றையும் கடந்து நிற்பவர் முக்தர்களுக்கு (பிறப்பிறப்புச் சுழலினின்றும் விடுதலை பெற்றவர்களுக்கு)க் கதியாய் விளங்குபவர் மாறுபாடு இல்லாதவர் புரத்தில் (உடலில்) இருப்பவர் அனைத்திற்கும் சாட்சியாய்(நேரில் காண்பவராய்) இருப்பவர் இடமாகிய உடலை அறிந்தவர் அழிவற்றவரும் கூட.

3. யோகத்தினால் அடையக்கூடியவர் யோக அறிஞர்களின் வழிகாட்டி இயற்கைக்கும் புருஷனுக்கும் அதிபதி ஆள் அரி உருவம் கொண்டவர். இலக்குமியை (மார்பில்) உடையவர் அழகிய குழலுடையவர் (கேசி என்னும் அரக்கனை அழித்தவர்) ஆண்களில் சிறந்தவர்.

4. அனைத்துமாகியிருப்பவர். எல்லாப் பிரஜைகளையும் அழிப்பவர். நன்மைகளைச் செய்பவர் நிலையாயிருப்பவர். படைப்புப் பொருள்கள் அனைத்திற்கும் ஆதியாய் இருப்பவர். அழியாச் செல்வமாகியவர் அவதாரம் எடுப்பவர். பயன்கள் அனைத்ததையும் வழங்குபவர் பிரபஞ்சம் முழுவதையும் தாங்குபவர். உயர் பிறப்புள்ளவர் திறன் மிக்கவர் அனைத்தையும் ஆள்பவர்.

## ஸ்தோத்ரம்

5. ஸ்வயம்பூ: சம்புராதித்ய:
புஷ்கராக்ஷோ மஹாஸ்வன:।
அனாதி நிதனோ தாதா
விதாதா தாதுருத்தம:।।

6. அப்ரமேயோ ஹ்ருஷீகேச:
பத்மநாபோऽமரப்ரபு: ।
விச்வகர்மா மநுஸ்த்வஷ்டா
ஸ்தவிஷ்டஸ் ஸ்தவிரோ த்ருவ:।।

7. அக்ராஹ்ய: ஸாச்வத: க்ருஷ்ணோ
லோஹிதாக்ஷ: ப்ரதர்தன:।
ப்ரபூத ஸ்த்ரிககுப்தாம
பவித்ரம் மங்களம் பரம் ।।

8. ஈஸான: ப்ராணத: ப்ராணோ
ஜ்யேஷ்டஸ் ச்ரேஷ்ட: ப்ரஜாபதி: ।
ஹிரண்யகர்ப்போ பூகர்ப்போ
மாதவோ மதுஸூதன:।।

# ஸ்தோத்ரம்

5. தானாகவே தோன்றியவர். இன்பம் தருபவர் : பகலவன் (சூரியனில் உறைபவர்) தாமரைக்கண்ணன்; எடுப்பான நாதம் உடையவர்; முதலும் முடிவும் இல்லாதவர் உலகின் அடிப்படையானவர் பிரம்மாவினும் உயர்ந்தவர்.

6. (இன்னதென) வரையறுக்கமுடியாதவர் (அளவைகளுக்கு அப்பாற்பட்டவர்) புலன்களை ஆள்பவர் ; ( அனைத்து உலகிற்கும் காரணமான) தாமரையைக் கொப்பூழில் உடையவர்; தேவர்களின் தலைவர் ; பேருலகைப் படைத்தவர்; அனைத்தையும் மனத்தில் எண்ணுபவர் ; எல்லாவற்றையும் அழிப்பவர் ( தன்னுள் இருந்து ஒன்றச் செய்பவர்) பெரிதும் பருமனானவர் தொன்மையானவர் நிலையாயிருப்பவர்

7. புலன்களினால் அறியவொண்ணாதவர் என்றும் இருப்பவர்; கரு நிறத்தவர்; சிவந்த கண்களையுடையவர் ஊழிக்காலத்தில் அனைத்தையும் அழிப்பவர் அருங்குணங்கள் நிரம்பியவர் மேல், நடு. கீழ் ஆகிய மூன்று உலகுகளின் இருப்பிடம் ( மூன்று கூறுகளாகப் பகுக்கப்பெற்ற ஞானம்- சக்தி( அறிவு - ஆற்றல்), பலம்- ஐசுவரியம்( வலிமை - அனைத்தையும் ஆளும் தன்மை) வீரியம் - தேஜஸ் ( வல்லமை- ஒளி) ஆகிய குணங்களின் இருப்பிடமானவர்); தூய்மையானவர் (துய்மைப்படுத்துபவர்) மங்கலமானவர் பரம்பொருள்

8. மாபெரும் ஆட்சியாளர் ( அனைத்து உயிர்களுக்கும்) உயிர் தருபவர் உயிரே ஆனவர், எல்லாவற்றிற்கும் மூத்தவரும் எல்லாவற்றினும் சிறந்தவரும் ஆனவர் மேன்மை பொருந்தியவர், அனைத்தையும் படைப்பவர் ( அனைத்திற்கும் தலைவர்) உலகினைக் கருவில் உடையவர் புவியினைக் கருவில் உடையவர் ( கருவில் வைத்துக் காப்பாற்றுபவர், திருவின் நாயகர் மது என்னும் அரக்கனை அழித்தவர்

9. ஈஸ்வரோ விக்ரமீ தந்வீ
மேதாவீ விக்ரம: க்ரம:।
அனுத்தமோ துராதர்ஷ:
க்ருதக்ஞ: க்ருதி ராத்மவான் ॥

10. ஸுரேச சரணம் சர்ம
விச்வரேதா: ப்ரஜாபவ:।
அஹ: ஸம்வத்ஸரோ வ்யாள:
ப்ரத்யய: ஸர்வதர்சன:॥

11. அஜ: ஸர்வேஶ்வர ஸித்த:
ஸித்தி: ஸர்வாதி ரச்யுத:।
வ்ருஷாகபிரமேயாத்மா
ஸர்வயோக விநிஸ்ருத:॥

12. வஸுர்வஸுமனா: ஸத்ய:
ஸமாத்மா ஸம்மித: ஸம:।
அமோக: புண்டரீகாக்ஷோ
வ்ருஷகர்மா வ்ருஷாக்ருதி:॥

9. சர்வ சக்தியுள்ளவர், பகைவர்களை அழிக்கும் வல்லமை கொண்டவர் வில்வீரர் மாபெரும் அறிஞர் உலகளந்தவர் அனைத்திலும் பரவியிருப்பவர் தம்மைவிட மேம்ப்பட்டவர் எவரும் இல்லாதவர் அச்சுறுத்தப்படமுடியாதவர் மிகச் சிறிய காணிக்கையினையும் ஏற்று அதற்காக நன்றியுள்ளவர் செயலாயிருப்பவர் தம்மைத்தாமே ஆதாரமாகக் கொண்டவர்

10. தேவர்களின் தலைவர் சரண்யர் (புகலாய் விளங்குபவர்) எல்லையில்லாத ஆனந்த வடிவினர் உலகம் அனைத்திற்கும் வித்தாயிருப்பவர் பிரஜைகளை ஆக்குபவர், படைப்பின் மூலவர் பிரகாசமானவர் ஆண்டின் (காலத்தின்) உரு, பாம்பைப் போல் எளிதில் அணுகமுடியாதவர் அல்லது பிடிக்க முடியாதவர் அறிவேஉருவானவர் அனைத்தையும் பார்ப்பவர்

11. பிறப்பற்றவர் அனைவருக்கும் தலைவர் முன்னமேயே எப்போதும் எவ்விடத்தும் இருப்பவர், அனைத்திலும் சிறந்த பயனாயிருப்பவர் அனைத்திற்கும் முதற்காரணமாயுள்ளவர், என்றும் வழுவாதவர் புவியினைக்காப்பாற்றிய வராக மூர்த்தி அளவினுள் அடங்காதவர் எல்லா யோகங்களினாலும் அறியக்கூடியவர்

12. அனைத்து உயிர்க்ளின் இருப்பிடமாயுள்ளவர் மிகத்தூய்மையான மனம் படைத்தவர், மெய்யே உருவானவர், அனைத்து உயிர்களிடத்தும் சமமாக இருப்பவர் ( அனைத்து உயிர்களையும் சமமாகக் கருதுபவர்) பக்த பராதீனர் ( அடியார்களின் வசத்தில் இருப்பவர்) எப்போதும் மாறுபாடில்லாதவர், என்றும் நடுநிலையில் இருப்பவர், பங்கயற்கண்ணன், அறம்சார் செயல்புரிபவர்; அறம்.என்பதன் வடிவானவர்

13. ருத்ரோ பஹுசிரா பப்ருர்
விஸ்வயோனி: சுசிஸ்ரவா:।
அம்ருத: சாச்வத: ஸ்தாணுர்
வராரோஹோ மஹாதபா:॥

14. ஸர்வக: ஸ்ர்வவித் பானுர்
விஷ்வக்ஸேனோ ஜனார்த்தன:।
வேதோ வேதவித வ்யங்கோ
வேதாங்கோ வேத வித்கவி : ॥

15. லோகாத்யக்ஷ: ஸுராத்யக்ஷோ
தர்மாத்யக்ஷ: க்ருதாக்ருத:।
சதுராத்மா சதுர்வ்யூஹச்
சதுர்தம்ஷ்ட்ரச் சதுர்ப்புஜ:॥

16. ப்ராஜிஷ்ணுர் போஜனம் போக்தா
ஸஹிஷ்ணுர் ஜகதாதிஜ:।
அநகோ விஜயோ ஜேதா
விச்வயோனி: புனர் வஸு:॥

13. துயரத்தை விரட்டுபவர், பல தலைகளை உடையவர். உலகங்களைத் தாங்குபவர், (அனைத்தையும் உள்ளடக்கிய) பிரபஞ்சத்தின் பிறப்பிடமானவர், பாவங்களைப் போக்கும் தூய்மையான தெய்வீகப் பெயர்களை உடையவர்( இனிமையான சொற்களைக் கேட்பவர்) அழிவில்லாதவர் (இறப்பற்றவர்,அல்லது அமுதம் போன்றவர்) என்றும் இருப்பவர் நிலைதிருப்பவர் மீண்டும் வராத சிறந்த சேரிடத்தவர் மாபெரும் தவத்தினர்

14. எங்கும் செல்பவர், அனைத்தும் அறிந்தவர், ஒளியுடன் திகழ்பவர், எதிரிகளின் படைகளைச் சிதறடிப்பவர். தமது பக்தர்களுக்கு மகிழ்ச்சியளிப்பவர் மறையே உருவானவர், வேதத்தின் பொருளினை உணர்ந்தவர், புலன்களினால் அறிய முடியாதவர்(வேதங்களை உறுப்புகளாகக் கொண்டவர்) வேதங்களை ஆய்வு செய்பவர், எல்லாவற்றையும் பார்க்கும் ஆற்றலுடையவர்

15. உலகங்களுக்கெல்லாம் தலைவர், தேவர்களின் அதிபதி அறங்களின் நாயகர், காரியமாகவும் அதற்கான காரணமாகவும் இருப்பவர் விழிப்பு, கனவு, உறக்கம் நான்காவது நிலை ஆகிய நான்கு நிலைகள் உடையவர் நால்வகைச் சக்திகளை உடையவர், நான்கு கூரியபற்களை (அல்லது கொம்புகளை) உடையவர் (நரசிம்மர்) நான்கு கைகள் உள்ளவர்

16. ஒளி உருவானவர், துய்க்கப்படும் பொருள் வடிவானவர் துய்ப்பவர் (எதிரிகளை) வெற்றி கொண்டு அடக்குபவர், உலகில் முதலில் தோன்றியவர், பாவமற்றவர், எப்போதும் ஜயிப்பவர் ( வெல்லுபவர்) வெற்றிச் செல்வராய் விளங்குபவர் அனைத்துலகுகளையும் பிறப்பிப்பவர் மீண்டும் மீண்டும் உடலில் உறைபவர் ( உடலினை நன்கு அறிந்தவர்)

17. உபேந்த்ரோ வாமன: ப்ராம்சு
அமோக: சுசிரூர்ஜிதஹ :।
அதீந்த்ர: ஸங்க்ரஹ: ஸர்கோ
த்ருதாத்மா நியமோ யம: ॥

18. வேத்யோ வைத்ய: ஸதாயோகீ
வீரஹா மாதவோ மது : ।
அதீந்த்ரியோ மஹாமாயோ
மஹோத்ஸாஹோ மஹாபல: ॥

19. மஹாபுத்திர் மஹாவீர்யோ
மஹாசக்திர் மஹாத்யுதி :।
அநிர்தேஸ்யவபு : ஸ்ரீமாந்
அமேயாத்மா மஹாத்ரி த்ருத் :॥

20. மஹேஷ்வாஸோ மஹீபர்த்தா
ஸ்ரீநிவாஸ: ஸதாம்கதி : ।
அநிருத்த: ஸுராநந்தோ
கோவிந்தோ கோவிதாம் பதி : ॥

21. மரீசிர்: தமனோ ஹம்ஸஸ்:
ஸுபர்ணோ புஜகோத்த ம :।
ஹிரண்யநாப: ஸுதபா:
பத்மநாப: ப்ரஜாபதி : ॥

17. இந்திரனின் தம்பி (வாமனனாகத் தோன்றியபோது வாமனாவதாரம் எடுத்தவர், (மூவுலகை அளந்தபோது) உயர்ந்தவர், வீணாகாத செயலுடையவர், தூய்மைப்படுத்துபவரும் தூய்மையானவருமானவர் வலிமை மிகுந்தவர் இந்திரனை விட உயர்ந்தவர் (ஊழிக்காலத்தில்) அனைத்தையும் சம்ஹரிப்பவர் படைப்பவர், நிலையான (பிறப்பிறப்பிற்குட்படாத ஆன்ம வடிவினர், நியமிப்பவர், அடக்கியாள்பவர்

18. (வீடு பேறு நாடுவோரால்) அறியக்கூடியவர், (பிறப்பிறப்பு உள்பட அனைத்து நோய்களையும் குணப்படுத்தும்) வித்தையறிந்தவர், எப்பொழுதும் யோகத்தில் இருப்பவர், பகைவீரர்களை அழிப்பவர், மெய்ஞ்ஞானத்தை வழங்குபவர், தேன் போல இனிப்பவர், புலன்களுக்கு அகப்படாதவர், மாபெரும் மாயன், பெரும் ஊக்கமளிப்பவர் (ஊக்கம்மிகுந்தவர்) மிக்க வலிமையுடையவர்

19. நிரம்ப ஞானம் உள்ளவர் மிக்க வீரியமுடையவர், பேராற்றல் கொண்டவர்மிகுந்த ஒளியுடையவர் வரையறுத்துக் கூறமுடியாத வடிவினர், திருவுடையவர் அளவிட முடியாதவர், பெரிய மலையினைத் தாங்கியவர்

20. மாபெரும் வில்லாளி பூமியைத் தூக்கியவர் (வராஹவதாரம்) ஸ்ரீதேவி நித்திய வாஸம் செய்யும்திருமார்பினை, நல்லோர்களின் அடைக்கலம் எவராலும் தடுக்கமுடியாதவர், தேவர்களுக்கு மகிழ்ச்சியளிப்பவர், பசுக்களின் தலைவர் வேதமறிந்தோர்களின் தலைவர்

21. ஒளிவடிவாகியவர், தண்டிக்கும் தன்மை உடையவர், ஹம்ஸ (அன்னப்பறவை) அவதாரம் எடுத்தவர், அழகிய சிறகுகளையுடையவர் (அடியார்களைக் கரையேற்றுபவர்) பாம்புகளின் சிறந்த ஆதிசேஷன், உந்தியில் தோன்றிய பிரம்மனைத் தாங்குபவர், மேலான தவஅறிவினைக் கொண்டவர், உந்திக்கமலர் உயிரினங்களின் தலைவர்

22. அம்ருத்யு: ஸர்வத்ருக் ஸிம்ஹ:
ஸந்தாதா ஸந்திமான் ஸ்திர : ।
அஜோ துர்மர்ஷண: சாஸ்தா
விச்ருதாத்மா ஸுராரிஹா ॥

23. குருர் குருதமோ தாம
ஸத்ய: ஸத்ய பராக்ரம : ।
நிமிஷோऽநிமிஷ: ஸ்ரக்வீ
வாசஸ்பதி ருதாரதீ : ॥

24. அக்ரணீர் க்ராமணீ: ஸ்ரீமாந்
ந்யாயோ நேதா ஸமீரண : ।
ஸஹஸ்ரமூர்த்தா விச்வாத்மா
ஸஹஸ்ராக்ஷ: ஸஹஸ்ரபாத் ॥

25. ஆவர்த்தநோ நிவ்ருத்தாத்மா
ஸம்வ்ருத: ஸம்ப்ரமர்தன :।
அஹஸ் ஸம்வர்த்தகோ வஹ்நி
ரனிலோ தரணீ தர : ॥

26. ஸுப்ரஸாத: ப்ரஸன்னாத்மா
விச்வஸ்ருக் விஸ்வபுக் விபு : ।
ஸத்கர்த்தா ஸத்க்ருத: ஸாதுர் :
ஜஹ்நுர் நாராயணோ நர :॥

22. அழிவற்றவர், எல்லாவற்றையும் காணுபவர் தவறு செய்யும் பாவிகளை இம்சிப்பவர், செயல்களின் பலனை ( உயிர்கள் பால்) சேர்ப்பவர் தாமாகவே இருந்து அடியார்களுக்குத் தம் (சேர்க்கை நீங்காதிருக்கச் செய்பவர்) மாறுதல் இல்லாதவர், ஏனையோரைப் போல் பிறப்பற்றவர் எதிரிகளால் அடக்க முடியாதவர், ஆணையிடுபவர், சுருதியினால் விவரிக்கப் பட்டவடிவினர் தேவர்களின் எதிரிகளை அழிப்பவர்

23. அனைத்து வித்தைகளையும் கற்பிப்பவர்; பரம குருவாக விளங்குபவர் ஒளி உருவானவர், உண்மையின் வடிவானவர் மிகுந்த துணிச்சலானவர், கண்களை மூடிக்கொண்டு ( யோக நித்திரையில்) இருப்பவர், எப்போதும் விழித்திருப்பவர், (வைஜெயந்தி) மாலை அணிந்திருப்பவர், வாக்கிற்கு (வித்தைக்கு) அதிபதியாய எல்லாவற்றையும் அறிந்தவர் உயர்ந்த சிந்தனையுடையவர்

24. உயர் பதவிக்கு இட்டுச் செல்பவர் உயிர்த்தொகுதியினை வழிப்படுத்துபவர், காந்தி மிகுந்தவர் நியாயமான முறைவடிவினர், உலகினை நடத்துபவர் காற்றின் உருவில் அனைத்தையும் அசையச்செய்பவர், ஆயிரம் தலைகள் உள்ளவர், அனைத்திலும் ஆன்மாவாய்த் திகழ்பவர், ஆயிரம் கண் கொண்டவர் ஆயிரம் கால்கள் உடையவர்

25. (சம்சார சக்கரத்தை) சுழலச் செய்பவர் ( சம்சார பற்றற்றவர், (யோக மாயையினால்) மறைக்கப்பட்டிருப்பவர்(உலகுகளை அழிப்பவர் (தம்முள்வயப்படுத்திக் கொள்பவர், பகலை உண்டாக்குபவர், அக்கினி வடிவினர், காற்று உருவினர், பூமியைத் தாங்குபவர்

26. அருள் மிகுந்தவர் (அருள் செய்பவர்) தெளிவான மனமுள்ளவர், உலகைத் தாங்குபவர் ( ஊழிக்காலத்தில் ) உலகைப் புசிப்பவர், பல்வகையான உருவங்களை உடையவர், நல்லோரைப் போற்றுபவர் நல்லோரால் பூஜிக்கப்படுபவர், நியாய வழியில் செல்பவர் ( அடியார்களின் பொருட்டு எச்செயலையும் செய்பவர்) சம்ஹார காலத்தில் அனைத்தையும் மறைப்பவர், உண்டாகியவை அனைத்தின் உறைவிடம் வழிகாட்டி நடத்துபவர்

27. அஸங்கயேயோs ப்ரமேயாத்மா
விசிஷ்ட: சிஷ்டக்ருச் சுசி : ।
ஸித்தார்த்த: ஸித்தஸங்கல்ப :
ஸித்தித: ஸித்திஸாதன : ॥

28. வ்ருஷாஹீ வ்ருஷபோ விஷ்ணுர்
வ்ருஷபர்வா வ்ருஷோதர : ।
வர்த்தநோ வர்த்தமானச்ச
விவிக்த: ஸ்ருதிஸாகர : ॥

29. ஸுபுஜோ துர்த்தரோ வாக்மீ
மஹேந்த்ரோ வஸுதோ வஸு: ।
நைகரூபோ ப்ருஹத்ரூப:
சிபிவிஷ்ட: ப்ரகாசன : ॥

30. ஓஜஸ்தேஜோ த்யுதிதர:
ப்ரகாசாத்மா ப்ரதாபன : ।
ருத்த: ஸ்பஷ்டாக்ஷரோ மந்த்ரச்
சந்த்ராம் சுர் பாஸ்கரத்யுதி : ॥ 30

27. கணக்கில் அடங்காதவர், அறிவினுக்கு எட்டாதவர் எல்லாவற்றிற்கும் மேலானவர், ஆணையிடுபவர் (நல்லோரைக் காப்பவர்) மாசில்லாதவர் வேண்டியனயாவும் தமக்குத்தாமெ அமைந்துள்ளவர், எண்ணியனயாவும் எய்துபவர், காரிய சித்திவழங்குபவர், சித்தி பெறுவதற்குச் சாதனமாக இருப்பவர்

28. தருமத்தை (அறிவியல் விதிகளை) ஆள்பவர் அடியவர்களின் கோரிக்கைகளை நிறைவேற்றுபவர் எங்கும் வியாபித்திருப்பவர்( உலகங்களை அளந்தவர்) தரும உருவினாளான படிகளினால் அடையக்கூடியவர் (பிரளய காலத்தில்) உயிர்கள் அனைத்தையும் வயிற்றுனுள் அடக்கிக் கொள்பவர், ஊட்டமளித்து வளர்ப்பவர், பிரபஞ்ச வடிவாக வளர்ப்பவர், தனித்து நிற்பவர், வேதங்களின் பெருங்கடல்

29. சிறந்த தோள்களை உடையவர் (அசாத்தியமான செயலாகிய) பிரபஞ்சத்தைத் தாங்குவதைச் செய்பவர். நல்வாக்கு கொண்டவர். எல்லாருக்கும் தலைவர்,செல்வம் தருபவர். செல்வமே உருவானவர், வடிவம் ஒன்றல்லாதவர் பலவகையானவடிவம் கொண்டவர்) பேருருவர் உள்ளவர், உயிருக்கு ஆதாரமாயிருப்பவர் (கிரணங்களுள் பிரவேசித்திருப்பவர்) அனைத்தையும் ஒளிரச் செய்து புலப்படுத்துபவர்

30. பலமும் பராக்கிரமும் ஒளியும் உடையவர் பிரகாசிக்கும் ஆன்மாவானவர் வெம்மையை உண்டாக்குபவர் (வெளிப் படையாகப் பிரகாசிக்கும் பெருமை உள்ளவர்) அறம் அறிவு பற்றின்மை முதலான குணங்கள் நிரம்பியவர், தெளிவான ஓம் என்னும் எழுத்தினால் குறிக்கப்படுபவர் ( தெளிவானவர், அழிவு இல்லாதவர்) வேத மந்திர வடிவினர் (தியானம் செய்பவரைக் காப்பாற்றுபவர் தண்கதிர்த் திங்களை போல் மகிழ்ச்சியளிப்பவர் சூரியனின் ஒளியினைப் போல் பிரகாசிப்பவர்

31. அம்ருதாம் சூத்பவோ பானு:
சசபிந்து: ஸுரேச்வர : ।
ஔஷதம் ஜகத: ஸேதுஸ்
ஸத்யதர்ம பராக்ரம : ॥

32. பூதபவ்ய பவந்நாத :
பவன: பாவனோऽநல : ।
காமஹா காமக்ருத்காந்த:
காம: காமப்ரத: ப்ரபு:॥

33. யுகாதிக்ருத் யுகாவர்த்தோ
நைகமாயோ மஹாஸந : ।
அத்ருச்யோऽ வ்யக்தரூபச்ச
ஸஹஸ்ர ஜிதநந்தஜித் ॥

34. இஷ்டோவிசிஷ்ட: சிஷ்டேஷ்டஸ்
சிகண்டீ நஹீஷோ வ்ருஷ : ।
க்ரோதஹா க்ரோதக்ருத் கர்த்தா
விச்வபாஹுர்மஹீதர : ॥

31. (பாற்கடலிலிருந்து ) சந்திரனை தோன்றச் செய்தவர், சுயம் பிரகாசமானவர், மக்களை போஷிப்பதில் சந்திரன் போன்றவர் ( நிலவுத்துளி போன்றவர்) தேவர்களின் தலைவர், ( பிறவிப் பிணிக்கு) அருமருந்தாய்த் திகழ்பவர், ( சம்சாரக் கடலைத் தாண்டுவதற்கான) பிரபஞ்சத்தின் பாலம், உண்மை, நல்லறம், வீரம் ஆகியவற்றை உடையவர்

32. நிகழ்ந்தது, நிகழ்வது, நிகழப்போவது ஆகியவை அனைத்திற்கும் அதிபதி, காற்று உருவினர், காற்றை வீசச்செய்பவர், துய்க்கத் துய்க்கத் தெவிட்டாதவர் (தீயினைப் போல் போதும் என்பதற்றவர்) அடியவர்களின் உலகியல் பற்றுக்களை அகற்றுபவர் காமனை உண்டாக்கியவர், கவர்ச்சிமிகுந்தவர் அனைவராலும் விரும்பப்படுபவர், கோரியவற்றை அளிப்பவர், உயர்ந்து விளங்குபவர்

33. யுகம் முதலானகால அளவுகளை உண்டாக்கியவர் யுகங்களை மீண்டும் மீண்டும் வரும்படி செய்பவர் பலவகை மாயங்களை கொண்டவர், பெருந்தீனி தின்பவர், (புலன்களுக்கு) புலப்படாதவர், அடியவர்களான யோகிகளுக்குத் தெளிவாகத் தெரிபவர் ஆயிரக்கணக்கான வரை ( தீயோரை) வெல்பவர்

34. அனைவருக்கும் விருப்பமானவர், தம்மை மிக்கவர் இல்லாதவர், ஞானிகளுக்குப் பிரியமானவர், மயில் தோகையை (அளவில்லாத ஐசுவரியத்தை) தலையணியாகக் கொண்டவர், மாயையால் உலகை (உயிர்களை) க் காட்டுபவர், அறத்தின் வடிவினர், நல்லோர்களின் சினத்தை ஒழிப்பவர், ( அரக்க இயல்புகள் கண்டு) கோபிப்பவர் எங்கிலும் கைகள் கொண்டு பிரபஞ்சத்தைத் தாங்குபவர், புவியினைத் தாங்கி அதன் தலைவராயிருப்பவர்.

35. அச்யுத: ப்ரதித: ப்ராண:
ப்ராணதோ வாஸவானுஜ : ।
அபாம் நிதி ரதிஷ்டானம்
அப்ரமத்த: ப்ரதிஷ்டித : ॥

36. ஸ்கந்த: ஸ்கந்ததரோ துர்யோ
வரதோ வாயுவாஹன : ।
வாஸுதேவோ ப்ருஹத்பானு:
ஆதிதேவ: புரந்தர: ॥

37. அசோகஸ் ஸ்தாரண ஸ்தார:
சூரஸ் சௌரிர் ஜனேச்வர : ।
அனுகூலச் சதாவர்த்த:
பத்மீ பத்மநிபே க்ஷண : ॥

38. பத்மநாபோऽரவிந்தாக்ஷ:
பத்மகர்ப்பஸ் சரீரப் ருத் ।
மஹர்த்திர் ருத்தோ வ்ருத்தாத்மா
மஹாக்ஷோ கருடத்வஜ : ॥

39. அதுல: சரபோ பீமஸ் :
ஸமயக்ஞோ ஹவிர் ஹரி : ।
ஸர்வலக்ஷண லக்ஷண்யோ
லக்ஷ்மீவான் ஸமிதிஞ்ஜய : ॥

35. எவ்வகை மாறுதலும் இல்லாதவர், புகழ்மிக்கவர் (பிரிசித்தியானவர்) பிராணனாக மூச்சுக்காற்றாக இருப்பவர், பிராணனை (வலிமையை) வழங்குபவர் இந்திரனின் தம்பியானவர் கடலாக இருப்பவர், உலகிற்கு இருப்பிடமாய் அமைந்தவர், கவனக்குறைவே இல்லாதவர் ( வேறு ஆதாரம் எதுவுமின்றி தாமாகவே) நிலைப்பெற்றிருப்பவர்

36. அமுதமாகப் பெருகுபவர் (அனைத்தையும் வற்றச்செய்பவர்), அறவழியினைக் கடைப்பிடிப்பவர், உலகின் பாரத்தைத் தாங்குபவர்(கோரிய வரங்களை அளிப்பவர், காற்றினை இயக்குவிப்பவர், எல்லாவற்றிலும் வசிக்கும் தேவர்( உலகம் யாவையும் பிரகாசப்படுத்தும் மாபெரும் சூரியன், உலகின் முதற்கடவுள் அநுபவங்களின் இருப்பிடங்களை அழிப்பவர்.

37. துயரம் (குறை இல்லாதவர்) பிறவிப்பெருங்கடலைக் கடக்கத்துணை புரிபவர், சம்சாரக்கடலின் இடர்களிலிருந்து காப்பாற்றிக் கரை சேர்ப்பவர், வீரம் மிகுந்தவர், சூரராகிய வசுதேவரின் புத்திரர்( பிறப்படைந்த) மக்கள் யாவர்க்கும் தலைவர், எல்லோருக்கும் அநுகூலம் செய்பவர், நூற்றுக்கணக்கான அவதாரங்கள் எடுத்தவர், தாமரையைக் கையில் கொண்டவர், தாமரை போன்ற (மகிழ்ச்சிதரும்) பார்வை உடையவர்.

38. நாபியில் பத்மத்தை (தாமரையை) உலகுகள் பதிநான்கினை) உடையவர், தாமரைக் கண்ணன் இதயத்தாமரையில் இருப்பவர், பக்தர்களாகிய உடலினைத் தரிப்பவர், பெரும்செல்வம் உடையவர், பிரபஞ்சத்தின் புகழ் கொண்டவர், ( முழு வளர்ச்சி பெற்ற உருவினர்) பெரிய (அகன்ற) கண்களை உடையவர், (உறுதியான அச்சுள்ள தேர் போன்ற கருடனை வாகனமாகக் கொண்டவர்) கருடக் கொடியினர்.

39. ஒப்பில்லாதவர் சுயம்பிரகாசமானவர் (அறவியல் கட்டுப்பாடு களை மீறுவோரை அழிப்பவர்) (தீயோர்களுக்கு) பயமானவர், காலத்தை (வழிபாட்டு முறைகளின் சமத்துவத்தை) அறிந்தவர், வேள்வியில் தீயினில் வழங்கப்படும் பொருள்களை எடுத்துக் கொள்பவர், பிரமாணங்கள் (அளவைகள்) அனைத்தினாலும் அறியப்படுபவர், திருவுருவையுடையவர், (போரில்) எப்போதும் வெற்றி கொள்பவர்

40.விக்ஷரோ ரோஹிதோ மார்க்கோ
ஹேதுர் தாமோதரஸ் ஸஹ : ।
மஹீதரோ மஹாபாகோ
வேகவானமிதாசன : ॥

41.உத்பவ: க்ஷோபனோ தேவ:
ஸ்ரீகர்ப்ப: பரமேஸ்வர : ।
கரணம் காரணம் கர்த்தா
விகர்த்தா கஹனோ குஹ : ॥

42. வ்யவஸாயோ வ்யவஸ்தான:
ஸம்ஸ்தான: ஸ்தானதோ த்ருவ : ।
பரர்த்தி: பரம: ஸ்பஷ்டஸ்
துஷ்ட: புஷ்ட: சுபேக்ஷண: ॥

40. குறைவில்லாதவர், சிவந்த நிறத்தவர் (ரோஹிதம் என்னும் செம்மீனாய் அவதரித்தவர்) அடியவர்களால் தேடப்படுபவர் (பேரின்பத்தினை அடைவதற்கான வழியாக இருப்பவர்) அனைத்திற்கும் பொருள் காரணமாகவும் செயல் காரணமாகவும் இருப்பவர், உலகங்களை வயிற்றில் வைத்திருப்பவர் (யசோதைப் பிராட்டியினால் கயிற்றில் கட்டப்பட்டவர்) அனைத்தையும் பொறுத்துக் கொள்பவர் பூமியைத் தாங்குபவர் பெரும்பேறு உள்ளவர், (ருக்மிணி ஸத்யபாமை, ஜாம்பவதி மற்றும் நப்பின்னை ஆயர்குலப் பெண்கள்முதலியோர் தாமாகவே வரிக்கத்தக்க பேரழகுள்ளவர்) அதிவேகமாகச் செயல்புரிபவர், அளவு கடந்த உணவினைப் புசிப்பவர்

41. உலகின் உற்பத்திக் காரணமானவர், படைப்பின் போது பிரகிருதியையும் புருஷனையும் கலக்குபவர் உணர்வினைப் பிரகாசப்படுத்துபவர், செல்வத்தைக் கருவில் உடையவர் , உயர் கடவுள், பிரபஞ்சத் தோற்றத்திற்குக் கருவியாய் உள்ளவர், பொருள் காரணமாகவும் செயல் காரணமாகவும் திகழ்பவர் படைப்பவர், படைப்பினைப் பலவகைப் படுத்துபவர், தமது உருவம், ஆற்றல் மற்றும் செயல் ஆகியவற்றை எளிதில் அறிந்துகொள்ள இயலாதவகையில் வைத்திருப்பவர், மாயையினால் மறைந்திருப்பவர்

42. உறுதியின் வடிவினர், பிரபஞ்சத்தின் ஆதாரமாயிருப்பவர், அனைத்தும் தம்மிடம் லயமடையுமாறு விளங்குபவர், பதவிகள் வழங்குபவர் (மேலான இடமான பரமபதத்தைக் கொடுப்பவர்) நிலையாயுள்ளவர், தமது பரத்துவம் மறையும் வண்ணம் இருப்பவர் தமது மேன்மையினை அனைவரும் அறியும் வண்ணம் வெளிப்படையாய்த் தெரிபவர், மகிழ்ச்சி அடைந்தவர், நிறையானவர் (உயர்குணங்கள் அனைத்தும் நிரம்பியவர்) மங்களமான பார்வையுடையவர்

43. ராமோ விராமோ விரதோ
மார்கோ நேயோ நயோSநய: |
வீரச் சக்திமதாம் ஸ்ரேஷ்டோ
தர்மோ தர்ம விதுத்தும : ||

44. வைகுண்ட்ட: புருஷ: ப்ராண:
ப்ராணத: ப்ரணவ ப்ருது : |
ஹிரண்ய கர்ப்ப சத்ருக்னோ
வ்யாப்தோ வாயு ரதோ க்ஷஜ : ||

45. ருதுச் ஸுதர்சன: கால:
பரமேஷ்டி பரிக்ரஹ : |
உக்ர: ஸம்வத்ஸரோ தக்ஷோ
விஸ்ராமோ விச்வதக்ஷிண : ||

43. அனைவருக்கும் ரம்மியமாக இருப்பவர், அனைத்து உயிர்களுக்கும் இறுதி இடமாயிருப்பவர். உலகியல் இன்பங்களில் பற்றில்லாதவர் (வீடு பேறுக்கு ) வழியாய் இருப்பவர், பேரின்பத்திற்கு இட்டுச் செல்பவர், எல்லாவற்றையும் நடத்துபவர், யாராலும் நடத்தப்படாதவர், வீரம் மிகுந்தவர், ஆற்றலுடையவர்களுள் மிகச் சிறந்தவர், தரும சொரூபி தரும மறிந்தவர்களுள் மிகவும் உயர்ந்தவர்

44. தடங்கலை நீக்குபவர் (எல்லோரையும் எல்லாவற்றறினையும் சேர்த்து வைப்பவர்) பரமபாவனன் அனைத்து உயிர்களுக்கும் மூச்சுக்காற்றாயிருப்பவர், பிராணனை வழங்குபவர், ஓம் உருவானவர் (உலகனைத்தினாலும் வணங்கப்படுபவர்) புகழால் மிகவும் உயர்ந்தவர் பிரம்மாவை உற்பத்தி செய்யும் பொன் அண்டத்தைத் தம்முள் வைத்திருப்பவர், (அகப்பகைகளையும் புறப்பகைகளையும்) அழிப்பவர், அனைத்திலும் வியாபித்திருப்பவர், எவ்வளவு அநுபவித்தாலும் மேன்மை குறையாதவர் (விண்ணிற்கும் மண்ணிற்கும் இடையில் பேருருவம் கொண்டவர்)

45. ருதுவினால் ( காலப்பகுதியினால்) கணிக்கப்படுபவர் காட்சிக்கினியவர், காலமே வடிவானவர், தமது எல்லையில்லாத மேன்மையினில் என்றும் நிலைத்திருப்பவர், பக்தர்களின் காணிக்கைகளை உவந்து ஏற்றுக் கொள்பவர், கண்டிப்பானவர், அனைத்துப் பொருள்களும் தம்மிடம் இருக்கும்படி செய்பவர் (காலத்தின் ஓர் அளவான ஆண்டின் வடிவத்தினர்) செயல்திறன் மிகுந்தவர், துயரங்களை மறக்கச் செய்பவர், அனைத்துக் காரியங்களிலும் சாமர்த்தியம் நிறைந்தவர்

46. விஸ்தார: ஸ்தாவர: ஸ்தாணு:
ப்ரமாணம் பீஜமவ்யயம் : ।
அர்த்தோSனர்த்தோ மஹாகோசோ
மஹாபோகோ மஹாதன : ॥

47. அநிர்விண்ண: ஸ்த்தவிஷ்டோ
பூர் தர்மயூபோ மஹாமக : ।
நக்ஷத்ரநேமிர் நக்ஷத்ரீ
க்ஷம: க்ஷாம: ஸமீஹன : ॥

48. யஜ்ஞ இஜ்யோ மஹேஜ்யச்ச
க்ரதுஸ் ஸத்ரம் ஸதாம் கதி : ।
ஸர்வதர்சீ நிவ்ருத்தாத்மா
ஸர்வக்ஞோ ஜ்ஞானமுத்தமம் ॥

46. அகண்ட வெளியாய் இருப்பவர், எல்லாவற்றிற்கும் நிலைத்த ஆதாரமாயிருப்பவர், அறிவிற்கான சாதனமாய்த் திகழ்பவர், தவறாத மூலகாரணமாய் விளங்குபவர், பக்தர்களின் குறிக்கோளாக அல்லது விரும்பப்படும் பொருளாக இருப்பவர், உலகியல் பொருள்களின்பால் நாட்ட முடையவர்களுக்குக் குறிக்கோளாக இல்லாதவர் ( அள்ள அள்ளக் குறையாத) மாபெரும் கருவூலம், பேரின்பக் கொடுமுடி பெருஞ்செல்வர்.

47. சோர்வில்லாதவர், ப்ரபஞ்சம் முழுவதுமே உடலாகக்கொண்ட பேருருவத்தினர், பிறப்பில்லாதவர் அறக்கொள்கைகள் அனைத்தையும் ஆள்வதற்கான வேள்விக் கம்பம் போன்ற உறுதியுடையவர், வேள்விகளுள் தலையாயவர், நட்சத்திரச்சக்கரத்தின் குடம் போன்றவர், நட்சத்திரங்களின் தலைவரான சந்திரனை ஒத்தவர், மிகுந்த பொறுமையுடன் இருப்பவர், ஊழிக்காலத்தில் அனைத்துச் செயல்களும் நின்று போன பிறகு எஞ்சியிருக்கும் ஒரே ஒருவர் ஆக்கல் அலுவல்களில் மிக்கத் திறமை உடையவர்

48. வேள்வியின் உருவத்தினர், வேள்விகளினால் ஆராதிக்கப் படுபவர். வேள்விகளினால் வணங்கப்படுபவர்களுள் சிறந்தவர், வேள்விக்கால் நாட்டிச் செய்யப்படும் வேள்வி வடிவினர், ஸத்ரயாகமாயிருப்பவர்( சாதுக்களைக் காப்பவர்), நல்லோர்களின் அடைக்கலம், அனைத்தையும் கண்டறியும் இயல்பினர், பற்று எதுவும் இல்லாது பற்றிலிருந்து விடுபட்டு இருப்பவர் எல்லாவற்றையும் அறிந்திருப்பதோடு, தாமே எல்லாம் என்பதையும் அறிந்திருப்பவர்,மிக உயர்ந்த ஞான வடிவினர்

49. ஸுவ்ரதஸ் ஸுமுகஸ் ஸூக்ஷ்மஸ்
ஸுகோஷஸ் ஸுகதஸ் ஸுஹ்ருத் ।
மனோஹரோ ஜிதக்ரோதோ
வீரபாஹுர் விதாரண : ॥

50. ஸ்வாபன: ஸ்வவசோ வ்யாபீ
நைகாத்மா நைககர்மக்ருத் : ।
வத்ஸரோ வத்ஸலோ வத்ஸீ
ரத்னகர்ப்போ தனேஸ்வர : ॥

51. தர்மகுப் தர்மக்ருத் தர்மீ
ஸத க்ஷரமஸத் க்ஷரம் : ।
அவிக்ஞாதா ஸஹஸ்ராம்சுர்
விதாதா க்ருதலக்ஷண : ॥

49.(அடியார்களைக் காக்கும்) சிறந்த விரதமுடையவர் எழில்முகம் கொண்டவர், நுண்ணிய உருவினர், வேதங்களே உருவாகியவர், ( வேத ஒலி வடிவினர்) இன்பம் அளிப்பவர் அடியார்களின் நலம் நாடும் நல்ல நண்பர். மனங்கவர் மாயோன் சினத்தினை வென்றவர் வீரம் மிகுந்த தோள்களை உடையவர், அதருமத்தைக் கிழித்து விடுபவர்

50.(உயிர்களை) உறங்கச் செய்பவர், முற்றிலும் சுதந்திரமானவர் ( யாருக்கும் வசப்படாதவர்) வான் போல் விரிந்து எதனிலும் வியாபித்திருப்பவர். ஒருடலே இல்லாத பல உடல்கள் உள்ளவர், ஓர் அலுவலே என்றில்லாது பல செயல்கள் புரிபவர். அனைத்திற்கும் தாமே இருப்பிடமாய் அமர்ந்தவர், அடியவர்களிடம் அன்பு கொண்டவர், அனைத்து உயிர்களையும் தம் குழந்தைகளாகக் கருதுபவர் இரத்தினங்களை உள்ளே வைத்திருக்கும் கடல் போன்றவர், பெருஞ்செல்வர்.

51.தருமத்தைக்-காப்பவர்( தர்மம் நிலைபெற வேண்டும் என்பதற்காக) தருமத்தைப் பின்பற்றுபவர், தருமங்கள் அனைத்தும் தம்மிடம் கொண்டவர், பிரம்மன் அல்லது பரம்பொருளாய் விளங்குபவர், நாமரூபம் அல்லது பெயர் வடிவம் முதலியவற்றினுள் மறைந்திருக்கும் பரம்பொருள் ஆகத் திகழ்பவர், அழிவற்றவர், வரையறுக்கப்பட்ட அழியக்கூடிய இருப்பினை உடையவர், தம்மை அண்டியவர்களின் ஒளிக்கற்றைகள் உடையவர். ( அளவில்லாத அறிவுகளைக் கொண்டவர்) புரியத்தக்க அடியார்களின் இலட்சணங்களை வகுத்தவர்

52. கபஸ்திநேமி: ஸத்வஸ்த்தஸ்
ஸிம்ஹோ பூதமஹேச்வர : ।
ஆதிதேவோ மஹாதேவோ
தேவேசோ தேவ ப்ருத்குரு : ॥

53. உத்தரோ கோபதிர்கோப்தா
க்ஞான கம்ய புராதன : ।
சரீரபூதப்ருத் போக்தா
கபீந்த்ரோ பூரிதக்ஷிண : ॥

54. ஸோமபோSம்ருதபஸ் ஸோம:
புருஜித் புருஸத்தம : ।
வினயோ ஜய: ஸத்யஸந்தோ
தாசார்ஹ : ஸாத்வதாம் பதி : ॥

52. சூரிய மண்டலத்தினுள் உறையும் பிரகாசமான பேருணர்வு (கிரணங்களினால் ஒளி வீசும் சக்கர) வடிவினர், சத்துவ குனத்தில் நிலைத்திருப்பவர், சீரிய சிங்கர் (நரசிம்ம அவதாரம் எடுத்தவர்) அனைத்து உயிர்களையும் கட்டுப் பாட்டினுள் வைத்திருக்கும் மாபெரும் தலைவர், முதன்முதலில் தோன்றிய முதற்கடவுள், பெருந்தேவர், தேவர்கள் அனைவருக்கும் தலைவர், தேவர்களைத் தாங்குபவர், தேவேந்திரனின் குருவாக விளங்குபவர்

53. சம்சாரக் கடலிலிருந்து உயிர்களைக் கரையேற்றுபவர் ( அனைத்திலும் உயர்ந்தவர்) பசுக்களை மேய்ப்பவர், உலகங்கள் அனைத்தையும் காப்பாற்றுபவர், ஞானத்திலேயே அடையக்கூடியவர், பழமைக்கும் பழமையாய் இருப்பவர், உடலை ஆக்கும் (நிலம், தீ, நீர், ஒளி, விசும்பு ஆகிய) ஐம்பூதங்களையும் தாங்குபவர், மாபெரும் துய்ப்பவர் ( அனைத்தையும் அநுபவிப்பவர்) வானரங்களின் தலைவரான இராமபிரான், பரிசுகளை ( தட்சிணைகளை) ஏராளமாக வாரி வழங்குபவர்

54. (வேள்விகளில் தீயினில் இடப்படும்) ஸோமம் எனப்படும் சாற்றினைப் பருகுபவர், அமிருதபானம் செய்பவர், சந்திரனின் உருவில் பயிர்களை வளரச்செய்பவர், பலரை வென்றவர், பலவடிவங்கொண்டு சிறந்து விளங்குபவர், தீயவர்களை ஒறுப்பவர். உண்மையில் நிற்பவர், தானத்திற்கு உகந்தவர், சத்துவ குணமுடைய நல்லோர்களை காப்பவர்.

55. ஜீவோ வினயிதாஸாக்ஷீ
முகுந்தோऽமிதவிக்ரம : ।
அம்போநிதி ரநந்தாத்மா
மஹோததிசயோऽந்தக : ॥

56. அஜோ மஹார்ஹஸ் ஸ்வாபாவ்யோ
ஜிதாமித்ர :ப்ரமோதன : ।
ஆனந்தோ நந்தனோ நந்தஸ்:
ஸத்யதர்மா த்ரிவிக்ரம : ॥

57. மஹர்ஷி: கபிலாசார்ய:
க்ருதக்ஞோ மேதினீபதி : ।
த்ரிபதஸ் த்ரிதசாத்ய க்ஷா
மஹாச்ருங்க: க்ருதாந்த க்ருத் ॥

55. ஜீவ வடிவினர் பக்தர்களை ஆதரித்து அவர்களின் நன்னடத்தைக்குச் சாட்சியாக இருப்பவர், முக்தியினை வழங்குபவர், அளவில்லாத பராக்கிரமம் மிகுந்தவர் கடல் போன்றவர், முடிவில்லாத ஆன்மாவை உடையவர், ( பிரளயத்தின் போது) பெருங்கடலில் படுத்திருப்பவர் இறுதியில் அனைத்திற்கும் முடிவு செய்பவர்

56. பிறப்பற்றவர், பெரு வணக்கத்திற்குரியவர் மாறுபாடு இல்லாதவர் (அனைத்திற்கும் காரணமானவர், இறையாண்மையினை இயல்பாகவே கொண்டவர்) அகப்பகைகளையும் புறப்பகைகளையும் வென்றவர், தியானிப்பவர்களுக்கு மகிழ்ச்சி உண்டாக்குபவர், தூய ஆநந்த வடிவினர், ஆநந்தம் அளிப்பவர், உண்மையான தருமத்தையுடையவர், மூவடிகளால் உலகுகள் யாவற்றையும் அளந்தவர்.

57. (வேதம் முழுவதும் அறிந்த) மஹரிஷியாகிய கபிலாச்சாரிய வடிவினர், தமது படைப்பாகிய பிரபஞ்சத்தினை அறிந்தவர் (பக்தர்கள் செய்த நல்லனவற்றையே உணருபவர்) புவியின் அதிபதி, மூன்று அடிகளை உடையவர், மூன்று நிலைகளுக்கும் (விழிப்பு, கனவு, உறக்கம் ஆகியவற்றிற்கு) தலைவர், பெரிய கொம்புடைய மீன் அவதாரம் செய்தவர், தமது படைப்பிற்குத்தாமே முடிவு காண்பவர் (இமயனை வெல்பவர்)

58. மஹா வராஹோ கோவிந்த:
ஸுஷேண: கனகாங்கதீ ।
குஹ்யோ கபீரோ கஹனோ
குப்தச்சக்ரகதா தர : ॥

59. வேதா: ஸ்வாங்கோ ஜித: க்ருஷ்ணோ
த்ருடஸ்ஸங்கர்ஷணோ(s)ச்யுத : ।
வருணோ வாருணோ வ்ருக்ஷ :
புஷ்கராக்ஷோ மஹாமனா : ॥

60. பகவான் பகஹா நந்தீ
வனமாலீ ஹலாயுத : ।
ஆதித்யோ ஜ்யோதி ராதித்ய:
ஸஹிஷ்ணுர் கதிஸத்தம : ॥

58. பெரும் வராக அவதாரம் செய்தவர், வேதங்களால் அறியப்படுபவர் ( பூமியினைக் காப்பாற்றுபவர்) உயர்ந்த சேனையை உடையவர், தங்கத்தோள் வளைகளைக் கொண்டவர், இதயத்தினுள் இரகசியமாக இருப்பவர், கம்பீரமானவர், ஆழம் காணமுடியாதவர் வாக்கிற்கும் மனத்திற்கும் எட்டாது மறைந்து விளங்குபவர், சக்கரம், கதை ஆகியவற்றைத் தரித்தவர்

59. படைப்பவர், தமக்குத்தாமே கருவியாகவும் காரணமாகவும் செயல்களுக்கு அங்கமாகவும் திகழ்பவர் (பொருள் காரணமாகவும் கருவிக்காரணமாகவும் செயல் காரணமாகவும் இருப்பவர்) எவராலும் வெல்லப் படாதவர், பகவான் கிருஷ்ணராய் விளங்குபவர், இயல்பு மாறாது நிலைத்திருப்பவர், யுகத்தின் முடிவில் தாம் மாறாது அனைத்தையும் இழுத்துக்கொள்பவர், மாலையில் மேற்கில் மறையும் சூரிய வடிவினர் வருணனின்புத்திரர், சம்சாரமாகிய பிரபஞ்ச மரத்தின் (அரச மரத்தின்) வடிவினர், எங்கும் வியாபித்திருப்பவர் (கருணைக் கண் உடையவர்) பெருமனம் கொண்டவர்

60. ஐசுவரியம், தருமம், கீர்த்தி, செல்வம், பற்றின்மை மோட்சம் ஆகிய குணங்களின் உறைவிடமாய்த் திகழ்பவர், ஊழிக்காலத்தில் அனைத்தையும் அழிப்பவர், ( எப்போதும்) மகிழ்ச்சி உடையவர் நீண்டமாலை அணிந்திருப்பவர், கலப்பையை ஆயுதமாக உடையவர் ( பலராமராக அவதாரம் எடுத்தவர்) அதிதி தேவியின் புத்திரர் ஆற்றலை வழங்கும் சூரியனாகவும் பயிர்களுக்கு ஊட்டமளிக்கும் சந்திரனாகவும் இருப்பவர், அனைத்தையும் பொறுத்துக்கொள்பவர், அனைவரும் சென்றடையும் உயர்ந்தவர்

61. ஸுதன்வா கண்ட பரசு :
தாருணோ த்ரவிணப்ரத : ।
திவிஸ்ப்ருக் ஸர்வத்ருக் வ்யாஸோ
வாசஸ்பதிரயோநிஜ : ॥

62. த்ரிஸாமா ஸாமக: ஸாம
நிர்வாணம் பேஷஜம் பிஷக் ।
ஸந்யாஸக்ருச்சம: சாந்தோ
நிஷ்டாசாந்தி: பராயணம் ॥

63. சுபாங்க: சாந்தித: ஸ்ரஷ்டா
குமுத: குவலேசய:।
கோஹிதோ கோபதிர் கோப்தா
வ்ருஷபாக்ஷோ வ்ருஷப்ரிய : ॥

64. அநிவர்த்தீ நிவ்ருத்தாத்மா
ஸம்க்ஷேப்தா க்ஷேமக்ருச்சிவ : ।
ஸ்ரீ வத்ஸவக்ஷா ஸ்ரீ வாஸஸ்
ஸ்ரீ பதி:ஸ்ரீ மதாம் வர : ॥

61. சிறந்ததான ( சார்ங்கம் என்னும்) வில்லினை உடையவர் (எதிரிகளை அழிக்கவல்ல) பிளக்கும் கோடரியினைக் கொண்டவர், (தீயோர்களுக்குக்) கொடியவர், (நல்லோர்களுக்கு) செல்வம் வழங்குபவர், வானத்தைத் தொடுபவர், அனைத்து ஞானங்களையும் விளக்குபவர் வியாஸர், வாக்கிற்கு (வித்தைக்கு) அதிபதி, கருவில் பிறக்காதவர்

62. மூன்று ஸாமங்களினால் போற்றப் படுபவர், ஸாம (வேத)த்தைப் பாடுபவர், ஸாமவேதமாகவே இருப்பவர், (அனைத்துத்துன்பங்களுக்கும் அப்பாற்ப்பட்ட) பேரானந்த வடிவினர், சம்சார நோய்க்கான மருந்து, தெய்வீக மருத்துவர், துறவுநிலையினை ஏற்படுத்தியவர், அமைதியான முடிவிடம் அசைவில்லாத அமைதி நிலை கொண்டவர், பிரளய காலத்தில் எல்லா உயிர்களும் பொருள்களும் முடிவு நிலை பெறும் இடம், மீண்டும் சம்சார நிலைக்குத் திரும்பாத இயல்புடையவர்

63. அழகுள்ள உறுப்புக்களைக் கொண்டவர், அமைதியினை வழங்குபவர், அனைத்தையும் படைப்பவர், புவியினில் மகிழ்பவர், பற்றற்ற நிவிருத்திப் பாதையினைப் பின்பற்றுவோரின் ஆன்மாவாயிருப்பவர். பூமிக்கு (பசுக்களுக்கு இதமாயிருப்பவர், புவிக்கு ஆதாரமாய் விளங்குபவர்,(உலகைக் காப்பவர்) வேண்டுவன அனைத்தையும் வழங்கும் அருள் விழியினர், ( தருமத்தையே கண்ணாகக் கொண்டவர்) தருமத்தின் பால் பற்றுள்ளவர்

64. வெற்றியின்றித் திரும்பாதவர் (தருமத்தினின்றும் திரும்பாதவர்) புலன் விஷயங்களிலுருந்து திரும்பியிருப்பதில் ஆர்வம் கொண்டவர்களின் தலைவர், பிரளய காலத்தில் பிரபஞ்சத் தினையே அணுவாகச் சுருக்குபவர், நலம் செய்பவர், தாமே மங்கள வடிவினராதலால் தம்மை நினைப்பவர்களுக்கு மங்களத்தையே செய்பவர், ஸ்ரீவத்ஸம் என்னும் மருவை மார்பினில் கொண்டவர், ஸ்ரீ தேவி வசிக்கும் இடத்தினர், ஸ்ரீ தேவியின்பதி, பெருமைக்குரிய (தே)வர்களில் சிறந்தவர்

65\. ஸ்ரீத: ஸ்ரீச: ஸ்ரீநிவாஸச்
ஸ்ரீநிதிச் ஸ்ரீவிபாவன : ।
ஸ்ரீதரச் ஸ்ரீகரச் ச்ரேயச்
ஸ்ரீமான் லோகத்ரயாச்ரய : ॥

66\. ஸ்வக்ஷ : ஸ்வங்க: சதானந்தோ
நந்திர்ஜ்யோதிர் கணேச்வர : ।
விஜிதாத்மா விதேயாத்மா
ஸத்கீர்த்திச் சின்னஸம்சய : ॥

67\. உதீர்ண: ஸர்வதஸ்சக்ஷு
ரனீசச் சாச்வதஸ் ஸ்த்திர : ।
பூசயோ பூஷணோ பூதிர்
விசோக: சோகநாசன : ॥

65. ஐசுவரியத்தை ( செல்வத்தை) அளிப்பவர், ஸ்ரீதேவியின் நாயகர் ( செல்வத்திற்கு அதிபதி) அனைத்துச் செல்வங்களின்கருவூலம், பிராணிகளின் வினைகளுக்குக்கேற்பச் செல்வத்தினைப் பகிர்ந்தளிப்பவர், ஸ்ரீ தேவியைத் தரிசிப்பவர், பக்தர்களுக்கு நன்மையினைச் செய்பவர் (செல்வத்தினை தருபவர்) நிலைத்த இன்பத்தின் வடிவினர், செல்வ நாயகர், மூவுலகிற்கும் புகலிடமாய் இருப்பவர்

66. அழகிய கண்களை உடையவர், எழில்மிகு அங்கங்களைக் கொண்டவர், நூறுவகை மகிழ்ச்சியின் இருப்பிடமானவர் (அளவில்லாத, அளக்கமுடியாத) ஆனந்த வடிவினர், ஒளி ( நட்சத்திரக்) கூட்டங்களின் அதிபதி, புலன்களை வென்றவர் ( பக்தர்களினால் வெல்லப்படுபவர், பக்தர்களுக்கு ஊழியராய் இருக்குமளவிற்கு அவர்களிடம் அன்பானவர்) பக்தர்களின் ஆணைகளுக்குக் கட்டுப்படுபவர், தூய புகழ்கொண்டவர், சந்தேகங்களற்றவர் (தனது தரிசனத்தினால் பக்தர்களின் ஐயப்பாடுகளை அகற்றுபவர்

67. அனைவரும் பார்க்கும் வகையில் அமைந்துள்ளவர். எங்கிலும் (பார்க்கும் திறன்) கொண்டவர். தமக்குமேற்ப்பட்ட அதிபதி எவரும் இல்லாதவர், எக்காலத்தும் (மாறாது) நிலைத்திருப்பவர், புவியின் மீது சயனித்தவர், எளிதில் அணுகக்கூடியதன்மை, வீரம், கருணை, பலம், அறிவு, அன்புடைமை போன்ற கல்யாண குணங்களினால் அலங்கரிக்கப் பட்டிருப்பவர், அனைத்துச் செல்வங்களால் உள்ளவர் துயரமில்லாதவர், (அடியவர்களின்) துயரத்தை அழிப்பவர்

68. அர்ச்சிஷ்மானர்ச்சித: கும்போ
விசுத்தாத்மா விசோதன : I
அநிருத்தோS ப்ரதிரத:
ப்ரத்யும்னோS மிதவிக்ரம : II

69. காலநேமி நிஹா வீரச்
சௌரி: சூர ஜனேச்வர : I
த்ரிலோகாத்மா த்ரிலோகேச:
கேசவ: கேசிஹா ஹரி : II

70. காமதேவ: காமபால:
காமீ காந்த: க்ருதாகம : I
அனிர்தேச்யவபுர் விஷ்ணுர்
வீரோ(அ)னந்தோ தனஞ்ஜய : II

71. ப்ரஹ்மண்யோ ப்ரஹ்மக்ருத் ப்ரஹ்மா
ப்ரஹ்ம ப்ரஹ்ம விவர்த்தன : I
ப்ரஹ்மவித் ப்ராஹ்மணோ ப்ரஹ்மீ
ப்ரஹ்மக்ஞோ ப்ராஹ்மணப்ரிய : II

68. சூரியன் முதலிய ஒளிரும் பொருள்களுக்கு ஒளி தருபவர், அனைவராலும் பூசித்துப் போற்றப்படுபவர், அனைத்து நலங்களும் நிரம்பித்ததும்பும் குடம், பரிசுத்தமான ஆத்மாவாக திகழ்பவர். வெல்லமுடியாதவர் (பாவங்களை அகற்றுபவர்) (பரம்பொருளின் வியூகங்களான நான்கில்) அநிருத்தர் (எதிரிகள் எவராலும் தடுக்கமுடியாதவர்) எதிரியே இல்லாதவர், ( நான்கு வியூகங்களில்) பிரத்யும்னர் ( அனைத்தையு ம் ஒளி வீசச்செய்பவர்) அளவில் அடங்காத மகிமை பொருந்தியவர்

69. காலநேமி அரக்கனைக்கொன்றவர் (காலத்தின் ஒரு முக்கியப்பகுதியாகிய அறியாமையினை அழிப்பவர்) வீரத்துடன் விளங்குபவர், சூர குலத்தில் உதித்தவர், சூரகுலத்து மக்களின் தலைவர், மூன்று உலகுகளினுள்ளும் உறைபவர், மூவுலகுகளின் தலைவர், கேசி எனப்படும் அரக்கனைக் கொன்றவர். சம்சாரத்தின் தீவினைகளையும் துயரங்களையும் நீக்குபவர் ( பச்சை நிறத்தவர்)

70. ஆசைகளை நிறைவு செய்யும் இறைவன் ( காதலுக்குரிய கடவுள்), ஆசைகளைப் பாதுகாப்பவர், அடியவர்களுக்கு வழங்குவதற்கான வளம் பெற்றவர், கவர்ச்சிமிகுந்தவர், ஆகமங்களைச் செய்தவர், வரையறுக்க இயலாத வடிவினர், எங்கும் நிறைந்து பரவியிருப்பவர், வீரம் மிகுந்தவர், முடிவற்றவர் (பாண்டவர்களுள் அர்ஜுனனாக இருப்பவர்

71. நியமங்கள், வேதங்கள், வாய்மை, அறிவு ஆகியவற்றைப் பரவச்செய்பவரும், ஆக்கியவரும், அவற்றின் போஷகரு மானவர், தவத்தினை ஏற்படுத்தியவர் (படைக்கும் தொழில் புரியும்) பிரமனாயிருப்பவர், பரம்பொருளாக விளங்குபவர், பரம்பொருள் பற்றி அறிவதற்கான முயற்சியினை வளர்ப்பவர், பிரம்மத்தை அறிந்தவர், வேதங்களைக் கற்பிப்பவர், பிரம்மம் என்பதில் அடங்கியுள்ள அனைத்தையும் தம்முள் கொண்டவர், வேதங்கள் அனைத்தையும் தம்முள் கொண்டவர், வேதங்கள் உருவே என்பதை உணர்ந்தவர். பிரம்மத்தின் சொரூபத்தைத் தெரிந்து கொண்டவர்களுக்குப் பிரியமானவர்

72. மஹாக்ரமோ மஹாகர்மா
மஹாதேஜா மஹோரக : ।
மஹாக்ரதுர் மஹாயஜ்வா
மஹாயக்ஞோ மஹாஹவி : ॥

73. ஸ்தவ்யஸ்:ஸ்தவப்ரிய: ஸ்தோத்ரம்
ஸ்துதி: ஸ்தோதாரணப்ரிய : ।
பூர்ண: பூரயிதா புண்ய :
புண்ய கீர்த்தி ரனாமய : ॥

74. மனோஜவ ஸ்தீர்த்தகரோ
வஸுரேதா வஸுப்ரதஹ : ।
வஸுப்ரதோ வாஸுதேவோ
வஸுர் வஸுமனா ஹவிஹி : ॥

75. ஸத்கதி: ஸத்க்ருதி: ஸத்தா
ஸத்பூதி ஸத்பராயண : ।
சூரஸேனோ யதுச்ரேஷ்ட:
ஸந்நிவாஸ: ஸுயாமுன : ॥

72.பெரும் காலடிகளைக் கொண்டவர், ( படைப்பு, இருப்பு, அழிப்பு என்னும்) பேரலுவல் செய்பவர், பேரொளியுள்ளவர், மிகப்பெரிய பாம்பாக இருப்பவர் (மிகப்பெரியவராக இருந்திடினும் சிறியோர்களின் உள்ளத்திலும் உறைபவர்) மாபெரும் வேள்வியின் வடிவினர், மாபெரும் வேள்வியினை நடத்துபவர், மிகச்சிறந்த ஜபமாகிய வேள்வியின் உருவாயுள்ளவர் ( வேள்வியினில் தீயினில் இடப்படும் அவிப்பொருளானவர்)

73. (அனைவராலும்) துதிக்கப்படுபவர், துதிகளை அன்புடன் ஏற்றுக்கொள்பவர், தாமே துதியாகவும் இருப்பவர், துதிக்கும் செயலும் தாமாகவே உள்ளவர், துதிப்பவருமாகியவர், (பக்தர்களைக் காக்கும் பொருட்டு) போர் செய்வதில் விருப்பமுடையவர், நிறைவே உருவாகியவர், ( அடியவர்களின் கோரிக்கைகளை) நிறைவேற்றுபவர், புண்ணியர், புண்ணியத்தினால் புகழடைந்தவர், சம்சாரப் பிணிக்கு அருமருந்தாய்த் திகழ்பவர்

74. மனத்தின் வேகத்திற்கு ஒப்பானவர், புண்ணிய தீர்த்தங்களை ஆக்கியவர் (உய்வளிக்கும் வித்தைகளை ஆக்கியவர்) ஒளியின் மூலமாயிருப்பவர், செல்வங்கள் வழங்குபவர், வீடுபேறாகிய செல்வத்தினை அளிப்பவர், வசுதேவரின் மகனாகப் பிறந்தவர், மாபெரும் செல்வமாகிய மோட்சத்தினைக் குறிப்பவர். எல்லோரின் மனத்திலும் வசிப்பவர், அவிப்பொருளாயிருப்பவர்

75. நல்லவர்களின் அடையப்படுபொருளாய் விளங்குபவர், நற்செயல்களை உடையவர், மாறுபாடற்ற, புகழுடைய ஞானவடிவாயிருப்பவர், நல்லவர்களுக்கு எல்லாவகை உதவிகளையும் புரிபவர். தத்துவம் அறிந்த பெரியோர்கள் அடையும் இடமானவர், சூரர்களாலான சேனையினை உடையவர், யதுக்குலத்தோரில் மிகவும் உயர்ந்தவர், நல்லவர்களின் புகலிடமாய் விளங்குபவர் யமுனை ஆற்றின் கரைகளில் வசிப்பவர்களால் சூழப்பெற்றவர்

76. பூதாவாஸோ வாஸுதேவஸ்
ஸர்வாஸு நிலயோऽநல : ।
தர்ப்பஹா தர்ப்பதோऽத்ருப்தோ
துர்த்தரோऽதாऽபராஜித : ॥

77. விச்வமூர்த்திர் மஹாமூர்த்திர்
தீப்தமூர்த்தி ரமூர்த்திமான் ।
அநேகமூர்த்திரவ்யக்தச்
சதமூர்த்தி: சதாநந : ॥

78. ஏகோ நைகஸ் ஸவ: க: கிம்
யத்தத் பத மனுத்தமம் ।
லோகபந்துர் லோகநாதோ
மாதவோ பக்தவத்ஸல : ॥

79. ஸுவர்ணவர்ணோ ஹேமாங்கோ
வராங்கச்சந்தனாங்கதீ ।
வீரஹா விஷம: சூன்யோ
க்ருதாசீ ரசலச்சல : ॥

76. அனைத்து உயிர்களின் இருப்பிடமாய் விளங்குபவர், மாயையினால் உலகினை மறைப்பவரான வாசுதேவர் உயிராற்றல்கள் அனைத்தின் இருப்பிடமாய் இருப்பவர், முடிவிலா ஆற்றலுள்ளவர், தீயவர்களின் செருக்கினை அழிப்பவர், அறவழியின் பால் இருப்பவர்களுக்குப் பெருமிதம் அளிப்பவர், நிறைவு அடைந்து திகழ்பவர், அறிய முடியாதவர் வெல்லமுடியாதவர்.

77. பிரபஞ்சமே உருவாகக்கொண்டு விள்ங்குபவர் பேருருவம் கொண்டவர், ஒளிவடிவானவர் உருவமில்லாதவர், பல உருவங்களுள்ளவர், அனைவருக்கும் தெளிவாக விளங்காதவர், நூறு (நூற்றுக்கணக்கான) உருவங்களுள்ளவர், நூறு (நூற்றுக்கணக்கான) முகங்கள் உடையவர்.

78. ஒன்றேயானவர், ஒன்றல்லாதவர், (பல வடிவங்கள் கொண்டவர்) வேள்வி வடிவினர், இன்பத்தைக் குறிக்கும் 'க' என்னும் சொல்லினால் துதிக்கப்படுபவர் (யாது எனத்) தேடி அறிய வேண்டியவர், தாமாகவே விளங்கி நிற்கும் வஸ்து என்பதனைக் குறிக்கும் 'யத்' என்னும் சொல்லினால் போற்றப்படுபவர், 'தத்' (அது) எனப்படும் பிரம்மமாகியவர் வீடுபேற்றினை அடைய விரும்புவோர் அடையத்தகுந்த உயர்நிலையிலுள்ளவர் உலகிற்கு உறவினர், உலகிற்குத் தலைவர், மது குலத்தில் உதித்தவர், அடியார்களிடம் அன்புமிகுந்தவர்.

79. பொன் வண்ணத்தினர், பொன்னுடல் உடையவர், அழகிய உறுப்புகளைக் கொண்டவர், மகிழ்வளிக்கும் தோள் வளைகளை அணிந்தவர், எதிரிவீரர்களை அழிப்பவர், நிகரில்லாதவர், நிர்க்குண வடிவினராதலால் இல்லாது போல் இருப்பவர், கோரிக்கையற்றவர், தீயோர்களால் அசைக்க முடியாதவர், நல்லோர்களினால் அசைக்கப்படுபவர்.

80. அமாநீ மாநதோ மான்யோ
லோகஸ்வாமீ த்ரிலோகத்ருத்।
ஸுமேதா மேதஜோ தன்யஸ்
ஸத்யமேதா தராதர : ||

81. தேஜோவ்ருஷோ த்யுதிதர:
ஸர்வசஸ்த்ரப்ருதாம் வர : ।
ப்ரக்ரஹோ நிக்ரஹோ வ்யக்ரோ
நைகச்ருங்கோ கதாக்ரஜ : ||

82. சதுர்மூர்த்திச் சதுர்பாஹுச்
சதுர்வ்யூ ஹச்சதுர்கதி : ।
சதுராத்மா சதுர்பாவ :
சதுர்வேத விதேகபாத் : ||

80. ஆத்மா என்ற அகந்தையில்லாதவர் (பக்தர்களின் பால் தமது உயர்வினை எண்ணாதவர்) பக்தர்களுக்கு தன்மான கௌரவமளிப்பவர், போற்றி வணங்கத்தக்கவர், உலகனைத்திற்கும், சுவாமியாயிருப்பவர் மூவுலகங்களையும் தாங்குபவர், சிறந்த அறிவுடையவர், வேள்வியின் பயனாய்ப் பிறந்தவர், பயன்கள் அனைத்தையும் பெற்றிருப்பவர், உண்மையான அறிவுடையவர், புவியின் ஆதாரமாய்த் திகழ்பவர்

81. ஒளியினைப் பொழிபவர், பிரகாசமான உறுப்புகளை உடையவர், ஆயுதம் தாங்கியவர்கள் அனைவரிலும் சிறந்தவர், பக்தர்களின் காணிக்கைகளை ஏற்பவர், அனைத்தையும் தம் வசம் அடக்கி வைத்திருப்பவர், முடிவில்லாதவர், (புருஷார்த்தங்களாகிய) அறம், பொருள், இன்பம், வீடு அல்லது நான்மறைகள் போன்ற உயர்ந்த பொருள்களாகிய) பல கொம்புகளை உடையவர் (எதிரிகளை ஒடுக்குவதற்கு பல்வகை உபாயங்களைப் பயன்படுத்துபவர்) வஸுதேவருக்கும் ஸுநாமைக்கும் பிறந்த ) கதன் என்பவனுக்கு மூத்தவன்

82. கிருதயுகத்தில் வெண்மையாகவும், திரேதாயுகத்தில் சிவப்பாகவும், துவாபரயுகத்தில் மஞ்சளாகவும், கலியுகத்தில் கருநிறமாகவும்) நான்கு உருவங்கள் கொண்டவர், நான்கு கைகளை உடையவர், (வாஸுதேவர், பலபத்திரர், பிரத்தியும்னர், அநிருத்தர் என்னும்) நான்கு வியூகங்கள் உள்ளவர், நான்கு வர்ணதருமங்களையும் ஆசிரம தருமங்களையும் பின்பற்றுவோரின் புகலிடமாய் உள்ளவர்( மனம், புத்தி, அகங்காரம், சித்தம் என்னும்) நான்கு உருவங்கள் பெற்றிருப்பவர், நான்கு வேதங்களையும் அறிந்தவர் உலகனைத்தையும் தமது ஒரு பகுதியில் கொண்டவர்

83. ஸமாவர்த்தோ நிவ்ருத்தாத்மா
துர்ஜயோ துரதிக்ரம : I
துர்லபோ துர்கமோ துர்கோ
துராவாஸோ துராரிஹா II

84. சுபாங்கோ லோக ஸாரங்கஸ்
ஸுதந்துஸ் தந்துவர்த்தனஹ I
இந்த்ரகர்மா. மஹாகர்மா
க்ருதகர்மா க்ருதாகமஹ II

85. உத்பவ: ஸுந்தர: ஸுந்தோ
ரத்னநாப: ஸுலோசன : I
அர்க்கோ வாஜஸன: ஸ்ருங்கீ
ஜயந்த: ஸர்வவிஜ்ஜயீ : II

86. ஸுவர்ணபிந்து ரக்ஷோப்யஸ்
ஸர்வ வாகீஸ்வரேச்வர : I
மஹாஹ்ருதோ மஹாகர்த்தோ
மஹாபூதோ மஹாநிதி : II

83. (காலச்சக்கரம் அல்லது சம்சாரச் சக்கரம் என்பதைப் பற்றுதலின்றி) சுழற்றுபவர், ஒன்றிலும், சேராத தனித்த மனமுள்ளவர், வெல்லப்பட முடியாதவர், விஞ்சப்பட முடியாதவர், அடைவதற்கு அரியவர், அறிந்துகொள்ளப்பட முடியாதவர், (அறியாமை காரணமாக) அடைவதற்குக் கடினமானவர், மிகுந்த சிரமத்துடன் உள்ளத்தில் தரித்து கொள்ளப்படுபவர், கேடு என்னும் எதிரிகளை அழிப்பவர்

84. அழகிய அங்கங்களை உடையவர், உலகங்களின் ஸாரங்களைக் கிரகித்துக் கொள்பவர்( உலகங்களின் ஸாரமான ஓம் என்னும் பிரணவ மந்திரத்தை வழிபடுவதனால் அடையத்தக்கவர்) உலகின் ஊடும் பாவுமாக விளங்குபவர், பிரபஞ்சத்தினை விருத்தி செய்பவர், இந்திரன் போன்று ஆளும் செயல்புரிபவர், பெருஞ்செயல்கள் செய்பவர், மாபெரும் செயல்களை நிகழ்த்தியவர், புனித இலக்கியமான வேதங்களையும் ஆகமங்களையும் செய்தவர்

85. இறுதி மூலமாய் (பிறப்பற்றவராய்) விளங்குபவர், பேரழகுடன் திகழ்பவர், தயை (இரக்கம்) மிகுந்தவர், அழகிய கொப்பூழ் உடையவர், அழகுமிகு விழிகள் உள்ளவர், செஞ்சுடரோன், உணவு அளிப்பவர், கொம்புள்ளவர்(கொம்புள்ள மீனாக அவதரித்தவர்) வெற்றிச் செல்வர், அனைத்தும் அறிந்தவர்களையும் வெல்பவர்

86. பொன்னிற அங்கங்களுடன் விளங்குபவர் (பொன்னிற ஓம் உருவாயிருப்பவர்) அசைக்கமுடியாதவர், பேச்சுத்திறன் மிகுந்தவர்கள் அனைவருக்கும் தலைவர், (மகிழ்ச்சி நிரம்பிய) பெரும் மடுவாய் இருப்பவர், படுகுழி போன்ற மாயைக்கு அதிபர், எங்கும் பரவியிருக்கும் பரம் பொருள், அனைத்துச் செல்வங்களும் சேமித்து வைக்கப்படும் பெருநிதியின் இருப்பிடமாக விளங்குபவர்

87. குமுத: குந்தர: குந்த:
பர்ஜன்ய: பாவனோ ऽ நில : ।
அம்ருதாசோ ऽ ம்ருத வபுஸ்
ஸர்வக்ஞ: ஸர்வதோமுக : ॥

88. ஸுலப: ஸுவ்ரத: ஸித்த
சத்ருஜித் சத்ருதாபன : ।
ந்யக்ரோதோ தும்பரோऽஸ்வத்தச்
சாணூராந்த்ர நிஷூதன : ॥

89. ஸஹஸ்ரார்ச்சிஸ் ஸப்தஜிஹ்வ:
ஸப்தை தாஹ் ஸப்தவாஹன : ।
அமூர்த்தி ரனகோ ऽ சிந்த்யோ
பயக்ருத் பயநாசன : ॥

90. அணுர்ப்ருஹத் க்ருசஸ் ஸ்தூலோ
குணப்ருந் நிர் குணோ மஹான் ।
அத்ருத்: ஸ்வத்ருதஸ் ஸ்வாஸ்ய:
ப்ராக்வம் சோவம்சவர்த்தன : ॥

87. பக்தர்களுடன் இருக்கும் பொருட்டு பொருளுலகிலும் இருப்பதில் மகிழ்ச்சி அடைபவர், குந்தமலர் ஒத்த அழகிய உறுப்புகளை உடையவர், இறுதி மெய்ப்பொருள் பற்றிய அறிவினை வழங்குபவர், சம்சார வெம்மையைத்தணிய வைக்கும் மேகம் போன்றவர், பரிசுத்தப்படுத்துபவர், என்றும் விழித்திருக்கும் ஞான வடிவினர் ( அடியவர்களுக்கும் எளியவர்) அமுதினை உண்பவர், தமது என்றும் அழியாத உடலின் அமுதத்தினால் தமது பக்தர்களைப் போஷிப்பவர், எல்லாம் அறிந்தவர், எந்த வழியிலும் அடையத் தக்கவாறு எல்லா பக்கங்களிலும் முகங்கள் உள்ளவர்.

88. எளிதில் அடையத்தக்கவர், தம்மை சரண் புகுந்தவர் எவராயினும் அவருக்கு அடைக்கலம் தரும் நல்ல விரதம் உடையவர், உயர்ந்த முழுமை பெற்றவர், எதிரிகளை வெல்பவர், எதிரிகளை வாட்டுபவர், பிரபஞ்சம் அனைத்திற்கும் மேலாக இருப்பவர், விண்ணையும் விஞ்சியவர். அரச மரம் போன்றவர், சாணூரன் என்னும் மல்லனைக் கொன்றவர்

89. ஆயிரம் கதிரவர்களின் ஒளியுடன் திகழ்பவர், தீயின் (காலி, கராலி, மநோஜவை, ஸுலோஹிதா, ஸுதூம்பரம், ஸ்புலிங்கினி, விச்வருசி என்னும்) ஏழு நாக்குகளை உடையவர், ( அரசு, அத்தி, புரசு, வன்னி, விகங்கதம், அசனிஹதம், புஷ்கரபர்ணம் என்னும்) ஏழு வகை சமித்துகளின் உருவினர், ஏழு குதிரைகளை உடைய சூரியனாக விளங்குபவர், உருவமற்றவர், பாவமற்றவர், அறியவொண்ணாதவர், ( தீயவர்களுக்கு) அச்சத்தை உண்டு பண்ணுபவர் (நல்லவர்களுக்கு) அச்சத்தை அகற்றுபவர்

90. அணுவளவிலான நுண்ணியதாயிருப்பவர், நிரம்பப் பெரிதாயிருப்பவர், மெல்லியவர், பருமனானவர், பேருலகை ஆள்வதற்கான முக்குணங்களையும் ஏற்றுக் கொள்பவர், குணம் எதுவும் இல்லாதவர் அனைத்திலும் பெரியவர், எதனாலும் தாங்கப்படாதவர், தம்மைத்தாமே தாங்கிக் கொள்பவர், சிறந்த இருப்பை உடையவர், வமிசக்கணக்கில் முதன்மையானவர், உலகினை வம்ச அளவில் பெருகச்செய்பவர்

91.பாரப்ருத் கதிதோ யோகீ
யோகீசஸ் ஸர்வகாமத : ।
ஆச்ரமச் ச்ரமண: க்ஷாமஸ்
ஸுபர்ணோ வாயுவாஹன : ॥

92.தனுர்த்தரோ தனுர்வேதோ
தண்டோ தமயிதா தம : ।
அபராஜிதஸ் ஸர்வஸஹோ
நியந்தாऽநியமோயம : ॥

93.ஸத்வவான் ஸாத்விக: ஸத்யஸ்
ஸத்ய தர்ம பராயண : ।
அபிப்ராய: ப்ரியார்ஹோऽர்ஹ :
ப்ரியக்ருத் ப்ரீதிவர்த்தன : ॥

94.விஹாயஸகதிர் ஜ்யோதிஸ்
ஸுருசிர் ஹுதபுக் விபு : ।
ரவிர் விரோசனஸ் ஸூர்யஸ்
ஸவிதா ரவிலோசன : ॥

91. உலகின் பாரத்தைச் சுமப்பவர், வேதங்களில் போற்றப்படுபவர், யோகத்தினால் அடையப்படுபவர், தியானம் செய்பவர்களில் சிறந்த தியான யோகி, அனைத்துக் கோரிக்கைகளையும் நிறைவேற்றித் தருபவர், சம்சாரக் காட்டில் உழல்பவர்களின் இறுதிப் புகலிடமாய் விளங்குபவர், அறிவிலிகளை வருத்துபவர், ஊழி இறுதியில் அனைவரையும் அழிப்பவர், மறைகளாகிய இலைகள் கொண்ட சம்சார மரமாய்த் திகழ்பவர், வாயுவை இயக்குவிப்பவர்.

92. வில்லினைத் தரித்தவர், வில்வித்தையினை அறிந்தவர், தண்டனை ஆயுதமாயிருப்பவர், தண்டனையாக உள்ளவர், தண்டிக்கும் செயலாக இருப்பவர், பகைவர்கள் எவராலும் வெல்லப்படாதவர் எல்லாவற்றையும் பொறுத்துக் கொள்பவர் ( செயலில் வல்லவர்) விதிகளின் படி அனைவரையும் நடக்கச் செய்பவர், தம்மைக் கட்டுபடுத்துபவர் எவரும் இல்லாதவர் (விதிகளாய் இருப்பவர்) விதிகளைச் செயல்படுத்துபவர்

93. தூய சத்துவப் பொருளாய் விளங்குபவர், சத்துவ குணத்தின் பயன்களை அளிப்பவர், உண்மையின் வடிவினர், உண்மைக்கும் தருமத்திற்கும் (அறவழியினுக்கும்) தம்மை அர்ப்பணித்துக் கொண்டவர், அடியவர்களால் அணுகப்படுபவர், அன்பிற்குரியவர், பூசனைக்கு ஏற்றவர், பக்தர்களுக்குப் பிரியமானதைச் செய்பவர், அன்பினைப் பெருகச் செய்பவர்

94. வானில் செல்பவர் அல்லது வானில் உறைபவர், சோதியாய் ஒளிர்பவர், பக்தர்களின் காணிக்கைகளைச் சுவையுடன் ஏற்பவர், வேள்வித்தீயினில் இடப்பட்டதைப் புசிப்பவர், எங்கும் இருப்பவர் சூரியனாய்த் திகழ்பவர், பல்வகைப் பிரகாசத்துடன் விளங்குபவர், பிரபஞ்சத்தின் மூலப்பொருளாய் இருப்பவர் (ஐசுவரியத்தை வழங்குபவர்) உலகுகளைத் தோற்றுவிப்பவர் கதிரவனைக் கண்ணாக கொண்டவர்.

95. அனந்த ஹுதபுக் போக்தா
ஸுகதோ நைகஜோऽக்ரஜ : ।
அநிர்விண்ணஸ் ஸதாமர்ஷீ
லோகா திஷ்டான மத்புத : ॥

96. ஸனாத் ஸனாதன தம :
கபிலஸ் கபிரவ்யய : ।
ஸ்வஸ்திதஸ் ஸ்வஸ்திக்ருத் ஸ்வத்தி
ஸ்வஸ்திபுக் ஸ்வஸ்தி தக்ஷிண : ॥

97. அரௌத்ர: குண்டலீ சக்ரீ
விக்ரம்யூர்ஜித சாசன : ।
சப்தாதிக: சப்தஸஹ :
சிசிர: சர்வரீகர : ॥

98. அக்ரூர: பேசலோ தக்ஷோ
தக்ஷிண: க்ஷமிணாம் வர : ।
வித்வத்தமோ வீதபய:
புண்யச்ரவண கீர்த்தன : ॥

95. முடிவில்லாதவர், அக்னியில் ஓமம் செய்யப்பட்டதை உட்கொள்பவர், அனைத்தையும் அநுபவிப்பவர் அடியவர்களுக்கு வீடுபேறு ஆகிய நிலையான இன்பத்தைக் கொடுப்பவர், பல்வேறு அவதாரங்கள் எடுத்தவர், முதலில் தோன்றியவர், அலுப்பில்லாதவர் துயரமில்லாதவர் பிரபஞ்சத்தின் ஒரே அடிப்படைப் பொருளாக இருப்பவர், அற்புதப்பொருளாய்த் திகழ்பவர்

96. காலத்தின் உருவமாக இருப்பவர் முன்னைப் பழம்பொருட்கும் முன்னைப்பழம் பொருளானவர் ஊழித்தீ போன்று கருஞ்சிவப்பு வண்ணத்தினர், சூரியனாய்த் திகழ்பவர், மாறுதல் எதுவுமின்றி இன்பத்தைக் காப்பவர், மங்களத்தை அல்லது நலத்தினை நல்குபவர், நல்லதைச் செய்பவர், நலத்தின் வடிவினர், நல்லதை அநுபவிப்பவர், தமது அடியவர்களுக்குப் பல நன்மைகளை தட்சிணையாக அளிப்பவர்

97. கோபமற்றறிருப்பவர், மகர குண்டலங்கள்(காதணிகள்) அணிந்தவர், சுதர்சனம் என்னும் சக்ராயுதத்தினை (சுடராழியினை)த் தரிப்பவர், மாபெரும் காலடிகளை உடையவர் (மிகுந்த பராக்கிரமமுள்ளவர்) உறுதியானவையும் மீறமுடியாதவையுமான ஆணைகள் பிறப்பிப்பவர், சொல்லினுள் அடங்காதவர் (சொல்லுக்கு எட்டாதவர்) புகழ்த் துதிகளை ஏற்றுக்கொள்பவர், தண்ணருளாளர், இருளை (இரவை) உண்டாக்குபவர்

98. கொடுமையற்றவர் (செயலினாலும், மனத்தினாலும், சொல்லினாலும்) எழிலுடன் விளங்குபவர், திறமை மிக்கவர், எல்லையில்லாத நலம் வழங்குபவர், பொறுமையாளர்களுள் மிகச் சிறந்தவர், அறிஞர்களில் மிக உயர்ந்தவர், அச்சமற்றவர், தம்மைப் பற்றிப்பாடினாலும் தமது மேன்மையினைக் கேட்டாலும் புண்ணியம் சேரும்படி செய்பவர்

99. உத்தாரணோ துஷ்க்ருதிஹா
புண்யோ துஸ்வப்னநாசன :
வீரஹா ரக்ஷணஸ் ஸந்தோ
ஜீவந : பர்யவஸ்த்தித : ||

100. அனந்தரூபோSனந்த ஸ்ரீ :
ஜிதமன்யுர் பயாப : |
சதுரச்ரோ கபீராத்மா
விதிசோ வ்யாதிசோ திச : ||

101. அனாதிர் பூர்புவோ லக்ஷ்மீஸ்
ஸுவிரோ ருசிராங்கத : |
ஜனனோ ஜனஜன்மாதிர்
பீமோ பீம பராக்ரம : ||

102. ஆதார நிலயோதாதா
புஷ்பஹாஸ: ப்ரஜாகர : |
ஊர்த்வகஸ் ஸத்பதாசார:
ப்ராணத: ப்ரணவ: பண : ||

103. ப்ரமாணம் ப்ராண நிலய:
ப்ராண த்ருத் ப்ராண ஜீவன : |
தத்வம் தத்வ விதேகாத்மா
ஜன்மமருத்யு ஜராதிக : ||

99. சம்சாரக்கடலிருந்து கரையேற்றுபவர், (தீய செயல்களினால் ஏற்படும் ) பாவங்களை அகற்றுபவர் புண்ணியவடிவினர், கெட்ட கனவுகளின் பயனை அழிப்பவர், சம்சாரச்சுழலை ஒழிப்பவர் (தீயவற்றிலிருந்து ) காப்பவர், நேர்மையானவர், (உயிர்களின் ஜீவனாகி அவற்றை )வாழ்விப்பவர் எங்கிலும் வியாபித்திருப்பவர்

100. பல வடிவங்களை எடுத்துக் கொள்பவர். எல்லையில்லாத செல்வமுடையவர், சினத்தை வென்றவர், பயத்தைப் போக்குபவர், சிறந்த நியாய மூர்த்தி, ஆழம் காணவியலாத இயல்பினர், விசேஷமான பலன்களை உரியவர்களுக்கு அளிப்பவர், சிறப்பு வாய்ந்த தளபதி அவ்வச் செயலுக்கான விளைவினைச் சுட்டிக் காட்டுபவர்

101.ஆதி அல்லது தோற்றம் இல்லாதவர், பூவுலகிற்கும் புவர்லோகத்திற்கும் ஆதாரமாயிருப்பவர் சோபையுடன் விளங்குபவர், மாபெரும் வீரர்,அழகுமிகு தோள் வளைகளை உடையவர், உயிர்களைப் படைப்பவர், மக்களின் தோற்றத்திற்குக் காரணமாயிருப்பவர், பயத்தைத் தருபவர், பயத்தை உண்டாக்கவல்ல வலிமை உடையவர்

102.அனைத்திற்கும் அடிப்படையான ஐம்பொருள்களுக்கும் அடிப்படையாய் விளங்குபவர், வேறு ஆதாரம் எதுவும் இல்லாதவர், பிரபஞ்சத்தின் புகழ்மணம் வீசும் மலராயிருப்பவர், எப்போதும் விழிப்புடன் உள்ளவர், அனைத்திற்கும் மேலாக இருப்பவர். அறநெறியினை பின்பற்றுபவர் “ஓம்” என்னும் பிரணவப் பொருளாக இருப்பவர், அகில உலகையும் ஆளும் மாபெரும் ஆளுனர்.

103.அனைத்து அறிவினுக்கும் ஆதாரமாயிருப்பவர். பிராணனின் (உயிரின்) இருப்பிடம் உயிரின் மூச்சைப் போஷிப்பவர், பிராணிகளை உயிருடன் இருக்கச் செய்பவர், மெய்ப்பொருளாக விளங்குபவர், மெய்ப்பொருளான தம்மை அறிபவர், ஒன்றேயாகி எங்கும் விரவியுள்ளவர், பிறப்பு இறப்பு, மூப்பு, ஆகியனவற்றை அகற்றுபவர்

104. பூர்ப்புவஸ் ஸ்வஸ்தரு ஸ் தாரஸ்
ஸவிதா ப்ரபிதாமஹ : ।
யக்ஞோ யக்ஞபதிர் யஜ்வா
யக்ஞாங்கோ யக்ஞவாஹன : ॥

105. யக்ஞப்ருத் யக்ஞக்ருத் யக்ஞி
யக்ஞபுக் யக்ஞ ஸாதன : ।
யக் ஞாந்தக்ருத் யக்ஞகுஹ்யம்
அன்ன மன்னாத ஏவ ச ॥

106. ஆத்மயோனி:ஸ் ஸ்வயம்ஜாதோ
வைகானஸ் ஸாமகாயன : ।
தேவகீ நந்தனஸ் ஸ்ரஷ்டா
க்ஷிதீச: பாபநாசன : ॥

107. சங்கப்ருந் நந்தகீ சக்ரீ
சார்ங்கதன்வா கதாதர : ।
ரதாங்க பாணி ரக்ஷோப்யஸ்
ஸர்வ ப்ரஹர ணாயுத : ॥

( ஸர்வப்ரஹரணாயுத ஓம் நம இதி )

104. பூவுலகு புவர்லோகம் மற்றும் ஸுவர் லோகம் ஆகிய மேலுலகுகள் ஆகியவற்றை அளாவிடும் பெரிய மரமாயிருப்பவர் (பிறவிக்கடலைக்) கடக்கச் செய்பவர், அனைத்தையும் உண்டாக்குபவர் (பாட்டனாகிய பிரமனுக்கும் தந்தையான) முப்பாட்டனாய் விளங்குபவர், வேள்வியாகவும் வேள்விகளைக் காப்பவராகவும் செய்பவராகவும் இருப்பவர், வேள்வியை உறுப்பாகக் கொண்டிருப்பவர், வேள்விகளைச் செய்விப்பவர்,

105. வேள்வியை ஏற்பவர், வேள்வியை உண்டாக்கியவர், வேள்விக்கான சாதனமாயிருப்பவர், வேள்வியை முடித்து வைப்பவர், வேள்வியின் இரகசியமாய் (அறிவு வேள்வியாய்) இருப்பவர், உணவாயிருப்பவர் உணவை உண்பவராகவும் விளங்குபவர்

106. உலகின் தோற்றத்திற்குப் பொருள் காரணமாயிருப்பவர்தாமாகவே பிறந்தவர், (வராக அவதாரத்தில் பூமியைத் தோண்டியவர், சாமவேதகானம் செய்பவர், தேவகியின் மைந்தர், உலகுகளைப் படைப்பவர், பூவுலகின் தலைவர், பாவங்களை அழிப்பவர்

107 (பாஞ்சஜன்யம் என்னும்) சங்கினை வைத்திருப்பவர், நந்தகம் என்னும் வாளினை உடையவர், (ஸுதர்சனம் என்னும்) சக்கரத்தை வைத்திருப்பவர், சார்ங்கம் என்னும் வில்லினை உடையவர், (கௌமோதகி என்னும்) கதையினைக் கொண்டவர், தேரின் சக்கரத்தை இயக்கும் சக்தியாக விளங்குபவர். எவராலும் அசைக்க முடியாதவர், அடிக்கும் கருவிகள் அனைத்தையும் ஆயுதமாகக் கொண்டவர்

(அடிக்கும் கருவிகள் அனைத்தையும் ஆயுதமாகக் கொண்டவரே, ஓம் என வணக்கம்)

108. வனமாலீ கதீ சார்ங்கீ
சங்கீ சக்ரீ ச நந்தகீ ।
ஸ்ரீமாந் நாராயணோ விஷ்ணுர்
வாஸுதேவோ ऽ பிரக்ஷது ॥

( ஸ்ரீ வாஸுதேவோऽ பிரக்ஷத்வோம் நம : இதி ॥ )

உத்தர பாகம் - ஒன்று
ருதுஹ் ஸுதர்சனஹ் கால
இதி திக் விமோகஹ

## த்யானம்

ஸுவ்ரதஸ் ஸுமுகஸ் ஸூக்ஷ்ம இதி க்ஞானாய ஹ்ருதாய நமஹ ।
ஸஹஸ்ரமூர்த்தா விச்வாத்மேதி ஐச்வர்யாய சிரஸே ஸ்வாஹா
ஸஹஸ்ரார்ச்சிஸ் ஸப்தஜிஹ்வ இதி சக்த்யை சிகாயை வஷட்
த்ரிஸா ஸாகமஸ் ஸாமேதி பலாய கவசாய ஹூம்
ரதாங்கபாணி ரக்ஷோப்ய இதி தேஜஸே நேத்ரத்ராய வௌஷட்
சார்ங்கதன்வா ததாதர இதிவீர்யாய அஸ்த்ராயபட்



108. வனமாலை அணிந்தவரும் கதை, சார்ங்கம் என்னும் வில், சங்கு, சக்கரம். நந்தகம் என்னும் வாள் ஆகியவற்றை உடையவரும், விஷ்ணு வாஸுதேவன் என்னும் பெயர்களைக் கொண்டவரும் லக்ஷ்மியுடன் இருப்பவருமான நாராயணன் (நம்மைக்) காப்பாற்றுவாராக

(ஸ்ரீவாசுதேவர் காப்பாற்றட்டும்
ஓம் என வணக்கம் என்றவாறு)

## பிற்பகுதி - ஒன்று

சுதர்சனசக்கரம் மற்றும் திரும்பத் திரும்ப வரும் காலம்
என்றவாறு திசைகளின் அடைப்பு நீக்கம்
உள்ளத்தில் உருவத்தை அமைத்துத் தியானித்தல்

நல்லுறுதியுடையவர், இனிய முகம் (பார்வை) உடையவர், நுட்பமானவர் என ஞானத்தை அடையும் பொருட்டு இதயத்திற்கு வணக்கம் ( இதயத்தைக் கையினால் தொடவும்)

ஆயிரம் தலையுள்ளவர், அனைத்துலகில் ஆன்மாவாயிருப்பவர் என ஐசுவரியத்தை அடையும் பொருட்டு தலையினுக்கு ஸ்வாஹா வணக்கம் ( தலையைக் கையால் தொடவும்)

ஆயிரம் ஒளிக்கிரணங்கள் உள்ளவர், ஏழு நாவுடையவர் என சக்தியினைப் பெறும் பொருட்டு தலை மயிருக்கு வஷட் வணக்கம் (தலை மயிரைக் கையால் தொடவும்

மூன்று ஸாமங்களால் துதிக்கப்படுபவர், ஸாமகானம் செய்பவர். ஸாம வேதமாயிருப்பவர் என பயனைப் பெறும் பொருட்டு கவசத்திற்கு ஹூம் வணக்கம் (இரு கைகளையும் குறுக்காக மடித்து தோள்களைத் தொடவும்)

தேர்ச்சக்கரத்தை இயக்கும் சக்தியானவர், அசைக்க முடியாதவர் என தேவைப்பெறும் பொருட்டு மூன்று கண்களுக்கு வௌஷட் வணக்கம் (நெற்றிக்கண் உள்பட மூன்று கண்களையும் மூன்று விரல்களினால் தொடவும்)

வில்வினை உடையவர், கதையை உடையவர் என வீரியம் பெரும்பொருட்டு அஸ்த்ராயபட் வணக்கம் (இரு உள்ளங்கைகளையும் சேர்த்துத் தட்டவும்)

|| பலஸ்ருதி ||

1. இதீதம் கீர்த்தனீ யஸ்ய
கேசவஸ்ய மஹாத்மன : |
நாம்நாம் ஸஹஸ்ரம் திவ்யானம்
அசேக்ஷேண ப்ரகீர்த்திதம் : ||

2. ய இதம் ச்ருணுயாந் நித்யம்
யஸ்சாபி பரிகீர்த்தயேத் |
நாசுபம் ப்ராப்னுயாத் கிஞ்சித்
ஸோSமுத்ரேஹ ச மாநவ: ||

3. வேதாந்தகோ ப்ராஹ்மண: ஸ்யாத்
க்ஷத்ரியோ விஜயீ பவேத் |
வைச்யோ தன ஸம்ருத்தஸ் ஸ்யாத்
சூத்ரஸ் ஸுகமவாப்னுயாத் ||

4. தர்மார்த்தீ ப்ராப்னுயாத் தர்ம -
மர்த்தாத்தீ சார்த்த மாப்னுயாத் |
காமான வாப்னுயாத் காமீ
ப்ரஜாத்தீ சாப்னுயாத் ப்ரஜா:||

5. பக்திமான் ய: ஸதோத்தாய
சுசிஸ் தத்கத மானஸ : |
ஸஹஸ்ரம் வாஸுதேவஸ்ய
நாம்நா மேதத் ப்ரகீர்த்தயேத் ||

## பிற்பகுதி இரண்டு
## தோத்திரத்தின் பயன்

1. இவ்வாறாக மகாத்மாவும் போற்றத்தக்கவரும் கேசவரின் இந்தத் தெய்வீகப்பெயர்கள் ஆயிரமும் மீதமில்லாது (எதையும் விட்டுவிடாது) சொல்லப்பட்டன.

2. எவன் இதை தினந்தோறும் கேட்கின்றானோ, எவன் கீர்த்தனம் செய்கின்றானோ அந்த மனிதன் இம்மையிலும் மறுமையிலும் எந்த ஒரு தீங்கையும் அடைய மாட்டான்.

3. பிராம்மணன் வேதாந்த அறிவினை அடைந்தவனாக ஆவான் க்ஷத்திரியன் வெற்றியாளனாக ஆவான், வைசியன் செல்வபெருக்கினை உடையவனாக ஆவான் சூத்திரன் இன்பம் பெறுவான்.

4. அறத்தை விரும்புபவன் அறத்தினைப் பெறுவான் பொருளை விரும்புபவன் பொருளை அடைவான் போகங்களைக் கோருபவன் போகங்களைப் பெறுவான் மக்கள்ள விரும்புபவன் மக்களைப் பெறுவான்.

5. பக்தியுள்ள எவன் ஒருவன் தூங்கியெழுந்துவுடன் தூய்மை மிக்கவனாய் வாசுதேவரின்பால் உள்ளத்தைச் செலுத்தி அவருடைய இந்த ஆயிரம் பெயர்களையும் நன்கு கீர்த்தனம் செய்கின்றானோ

6. யச: ப்ராப்னோதி விபுலம்
யாதி ப்ராதான்யமேவ ச ।
அசலாம் ச்ரிய மாப்னோதி
ச்ரேய : ப்ராப்னோத்யனுத்தமம் ॥

7. ந பயம் க்வசிதாப்நோதி
வீர்யம் தேஜச்ச விந்ததி ।
பவத்யரோகோ த்யுதிமான்
பலரூபகுணான்வித : ॥

8. ரோகார்த்தோ முச்யதே ரோகாத்
பத்தோ முச்யேத பந்தனாத் ।
பயான் முச்யேத பீதஸ்து
முச்யேதாபந்ந ஆபத : ॥

9. துர்காண்யதி தரத்யாசு
புருஷ: புருஷோத்தமம் ।
ஸ்துவன்நாம ஸஹஸ்ரேண
நித்யம் பக்தி ஸமன்வித : ॥

10. வாஸுதேவாச்ரயோ மர்த்யோ
வாஸுதேவ பராயண : ।
ஸர்வபாப விசுத்தாத்மா
யாதி ப்ரஹ்ம ஸனாதனம் : ॥

11. ந வாஸுதேவ பக்தானாம்
அ சுபம் வித்யதே க்வசித் ।
ஜன்மம்ருத்யு ஜராவ்யாதி
பயம் நைவோ பஜாயதே ॥

6. பரந்த புகழினைப் பெறுவான், முதன்மை இடத்தையும் பெறுவான் நிலையான செல்வத்தைப் பெறுவான் உத்தமமான உயர்நலத்தை (வீடு பேற்றினை) அடைவான்

7. எங்கும் பயம் அடையமாட்டான் வீரியத்தையும் தேஜஸ்ஸினையும் பெறுவான் நோயற்றவனாகவும் ஒளியுடையவனாகவும் வலிமையும் அழகும் (நற்)குணங்களும் பொருந்தியவனாகவும் இருப்பான்

8. நோயினால் வருந்துபவன் நோயினின்றும் விடுபடுகின்றான், கட்டுப்பட்டவன் கட்டினின்றும் விடுபடுகின்றான், அச்சமுற்றவன் அச்சத்திலிருந்து விடுபடுகின்றான், ஆபத்தில் இருப்பவன் ஆபத்திலிருந்து விடுபடுகின்றான்

9. பக்தியுடன் ஆயிரம் பெயர்களினால் நாள்தோறும் புருஷோத்தமனைத் துதிக்கும் மனிதன் கடத்தற்கரிய துன்பங்களை விரைவில் கடந்து விடுகின்றான்

10. வாசுதேவரைப் புகலடைந்தவனும் வாசுதேவரையே நினைத்திருப்பவனும் ஆன மனிதன் அனைத்துப் பாவங்களினின்றும் விடுபட்டுத் தூய உள்ளத்தவனாய் பழைமையான பிரம்மத்தை(பிரம்ம நிலையினை) அடைகின்றான்

11. வாசுதேவரின் பக்தர்களுக்கு எங்கும் கெடுதல் இராது பிறப்பு, இறப்பு, மூப்பு நோய் இவற்றின் பயம் ஒரு போதும் உண்டாகாது

12. இமம் ஸ்தவமதீயான:
ச்ரத்தா பக்தி ஸமன்வித : ।
யுஜ்யேதாத்மா ஸுகக்ஷாந்தி
ஸ்ரீ த்ருதி ஸ்ம்ருதி கீர்த்திபி : ॥

13. ந க்ரோதோ ந ச மாத்ஸர்யம்
ந லோபோ நாசுபா மதி : ।
பவந்தி க்ருத புண்யானாம்
பக்தானாம் புருஷோத்தமே ॥

14. த்யௌ: ஸசந்த்ரார்க்க நக்ஷத்ரம்
கம் திசோ பூர்மஹோததி : ।
வாஸுதேவஸ்ய வீர்யேண
வித்ருதானி மாஹாத்மன :॥

15. ஸஸுராஸுர கந்தர்வம்
ஸ ய க்ஷோரக ராக்ஷஸம் ।
ஜகத்வசே வர்த்ததேதம்
க்ருஷ்ணஸ்ய ஸசராசரம் : ॥

16. இந்த்ரியாணி மனோபுத்தி:
ஸத்யம் தேஜோ பலம் த்ருதி : ।
வாஸுதேவாத்மகான் யாஹு:
க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞ ஏவ ச ॥

17. ஸர்வாகமாநா மாசர:
ப்ரதமம் பரிகல்ப்யதே ।
ஆசாரப்ரதமோ தர்மோ
தர்மஸ்ய ப்ரபுரச்யுத : ॥

12. ஈடுபாட்டுடனும் பக்தியுடனும் இத்தோத்திரத்தைப் பாராயணம் செய்பவன் ஆத்மசுகம் பொறுமை செல்வம் தைரியம், நினைவாற்றல் புகழ் ஆகியவற்றுடன் கூடியவனாய் இருப்பான்

13. புருஷோத்தமனைப் போற்றி வழிபடும் புண்ணியவான்களுக்கு கோபம் இராது, பொறாமை இராது பேராசை இராது தீய எண்ணம் இராது

14. சந்திரன் சூரியன் விண்மீன்கள் ஆகியவற்றுடன் கூடிய வானமும் ஆகாயமும் திக்குகளும் பூமியும் சமுத்திரமும் மகாத்மாவாகிய வாசுதேவரின் வீரியத்தினால் தாங்கப் பெறுகின்றன

15. தேவர்கள் அசுரர்கள் கந்தருவர்கள், இயக்ஷர்கள். நாகர்கள். இராக்கதர்கள் ஆகியவர்களுடன் கூடியதும் அசைவதும் அசையாததுமான பொருள்கள் உள்ளதுமான இவ்வுலகு கிருஷ்ணனின் வசத்தில் உள்ளது

16. இந்திரியங்கள் (செயல் உறுப்புகள் மற்றும் அறிவு உறுப்புகள்) உள்ளம் புத்தி சத்துவ குணம் ஆற்றல் வலிமை உறுதி உடல் ஜீவன் எல்லாம் வாசுதேவரின் ஆன்மாவினுள் அடங்கியது என (அறிஞர்கள்) கூறுகின்றனர்

17. ஆகமங்கள் அனைத்திற்கும் ஆசாரமே முதலாவதாகும் ஆசாரத்திலிருந்து உண்டாவது தருமம் தருமத்தின் தலைவர் அச்யுதர்

18. ருஷய: பிதரோ தேவா
மஹாபூதானி தாதவ : ।
ஜங்கமா ஜங்கமம் சேதம்
ஜகந்நாராயணோத்பவம் ॥

19. யோகோ க்ஞானம் ததா ஸாங்க்யம்
வித்யா: சில்பாதி கர்மச ।
வேதா: சாஸ்த்ராணி விஜ்ஞான
ஏதத் ஸர்வம் ஜனார்த்தனாத் ॥

20. ஏகோ விஷ்ணுர் மஹத்பூதம்
ப்ருதக்பூதான் யனேகச:।
த்ரீன் லோகான் வ்யாப்ய பூதாத்மா
புங்க்தே விஸ்வபுகவ்யய : ॥

21. இமம் ஸ்தவம் பகவதோ
விஷ்ணோர் வ்யாஸேன கீர்த்திதம் : ।
படேத்ய இச்சேத் புருஷ:
ச்ரேய:பராப்தும் ஸுகானி ச ॥

22. விச்வேச்வர மஜம் தேவம்
ஜகத: ப்ரபு மவ்யயம்: ।
பஜந்தி யே புஷ்கராக்ஷம்
ந தே யாந்தி பராபவம் ।

( நதே யாந்தி பராபவம் ஓம் நம இதி ॥ )

18. ரிஷிகள் நீத்தார் (இறந்து போன முன்னோர்கள் தேவர்கள் ஐம்பெரும் பொருள்கள் . தாதுக்கள் அசைவன அசையாதன ஆகிய இவை அனைத்தும் உலகின் நாயகனான நாராயணனிடமிருந்து தோன்றியதாகும்

19. யோகம், மெய்யறிவு, சாணக்யம், வித்யைகள், சிற்பம். முதலிய தொழில்கள் வேதங்கள் சாத்திரங்கள் விஞ்ஞானம் ஆகிய இவை அனைத்தும் ஜனார்த்தனரிடமிருந்து உண்டானவை

20. பெரும் பொருளாகி ஒன்றேயான விஷ்ணு பல்வேறாகப் பிரிந்து வெவ்வேறாகி உண்டாகிய எல்லாவற்றையும் , மூவுலகினையும் வியாபித்து அவற்றின் ஆத்மாவாய் (உயிருக்கு உயிராய்) விளங்கி அழிவும் மாறுதலும் இல்லாதவராய் எல்லாவற்றையும் அநுபவிக்கின்றார்.

21. எந்த ஒரு மனிதன் மிகச்சிறந்த ஆனந்தத்தையும் இன்பங்களையும் அடைய விரும் புகிறானோ அவர் வியாசரால் போற்றிச் செய்யப்பெற்ற பகவான் விஷ்ணுவின் இந்தத் துதியினை படிக்க வேண்டும்

22. உலகின் தலைவரும் பிறப்பில்லாதவரும் பிரபஞ்சத்தின் அதிபதியும் மாறுதல் அடையாதவரும் கமலக்கண்ணனுமாகியவரை எவர்கள் வணங்குகின்றனரோ அவர்கள் தோல்வி அடைய மாட்டார்கள்

(அவர்கள் தோல்வி அடையமாட்டார்கள்
'ஓம்' என வணக்கம் )

23. அர்ஜுன உவாச --

பத்மபத்ர விசாலாக்ஷ
பத்மநாப ஸுரோத்தம ।
பக்தானா மனுரக்தானாம்
த்ராதா பவ ஜனார்த்தன ।।

24. ஸ்ரீ பகவானுவாச --

யோ மாம் நாம ஸஹஸ்ரேண
ஸ்தோது மிச்சதி பாண்டவ ।
ஸோ(s)ஹமேகேன ச்லோகேன
ஸ்துத ஏவ ந ஸம்ஸய: ।।
ஸ்துத ஏவ நஸம்சய ஓம் நம் இதி ।।

25. வ்யாஸ உவாச --

வாஸனாத் வாஸுதேவஸ்ய
வாஸிதம் தே புவனத்ரயம்: ।
ஸர்வபூத நிவாஸோ(s)ஸி
வாஸுதேவ நமோஸ்ஸ்து தே ।।
( ஸ்ரீ வாஸுதேவ நமோ(s)ஸ்து த ஓம் நம் இதி ।।)

26. பார்வத்யுவாச --

கேனோபாயேன லகுனா
விஷ்ணோர் நாமஸஹஸ்ரகம் ।
பட்யதே பண்டிதைர் நித்யம்
ச்ரோது மிக்சாம் யஹம் ப்ரபோ ।।

23. அர்ஜுனன் கூறினான் –

தாமரை இதழினை ஒத்த அகன்ற விழிகளை உடையவரே, கொப்பூழில் தாமரை உள்ளவரேதேவர்களுள் உயர்ந்தவரே, ஜனார்த்தனா, (உன்பால்) அன்பு கொண்டுள்ள பக்தர்களுடைய இரட்சகராக (காப்பவராக) இருக்கவும்

24. ஸ்ரீ பகவான் சொன்னார் –

பாண்டுவின் மைந்தனே, எவர்கள் என்னை ஆயிரம் பெயர்களினால் துதிக்க விரும்புகின்றனரோ நான் ஒரு சுலோகத்தினாலேயே துதிக்கப் பெற்றவனாக இருப்பேன் (இதில் ஐயம் இல்லை)
(துதிக்கப் பெற்றவனாக இருப்பேன் ஐயமில்லை ஓம் என வணக்கம்)

25. வியாசர் கூறினார் –

வாசுதேவர் வசிப்பதால் மூவுலகும் வசிக்கப்பட்டதாயிற்று, (நீர்)எல்லாப் பொருள்களிலும் இருப்பிடம் கொண்டவராக இருக்கின்றீர் வாசுதேவரே உமக்கு வணக்கம் ஆகுக

வாசுதேவரே உமக்கு வணக்கம் ஆகுக ஓம் என வணக்கம்

26. பார்வதி கூறினாள் –

எந்த உபாயத்தினால் அறிஞர்களினால் விஷ்ணுவின் பெயர்கள் ஆயிரம் எளிதில் எப்போதும் படிக்கப் படுகின்றது, பிரபுவே, நான் கேட்க விரும்புகிறேன்

27. ஈஸ்வர உவாச

ஸ்ரீராம ராம ராமேதி
ரமே ராமே மனோ ரமே ।
ஸஹஸ்ரநாம தத்துல்யம்
ராமநாம வராநநே ॥

( ஸ்ரீராமநாம வராநந ஓம் நம இதி )

28.ப்ரஹ்மோவாச

நமோ ஸ்த்வநந்தாய
ஸஹஸ்ரமூர்த்தயே
ஸஹஸ்ரபாதா
க்ஷிசிரோருபாஹவே ।
ஸஹஸ்ரநாம்னே
புருஷாய சாஸ்வதே
ஸஹஸ்ரகோடி
யுகதாரிணே நம : ॥

(ஸ்ரீ ஸஹஸ்ரகோடி யுகதாரிண ஓம் நம இதி )

29.ஸஞ்ஜய உவாச

யத்ர யோகேஸ்வர க்ருஷ்ணோ
யத்ர பார்த்தோ தனுர்த்தர : ।
தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர்
த்ருவா நீதிர் மதிர்மம ॥

30.ஸ்ரீ பகவானுவாச

அநன்யாச்சிந்தயந்தோ மாம்
யே ஜனா: பர்யுபாஸதே ।
தேஷாம் நித்யாபியுக்தானாம்
யோகக்ஷேமம் வஹாம்யஹம் ॥

27. ஈச்வரன் சொன்னார்

அழகிய முகமுடையவனே. ஸ்ரீராம ராம ராம் என மனத்திற்கு இனியவனாய் உள்ள இராமனிடம் நான் இன்புறுகின்றேன் ராம என்னும் பெயர் ஆயிரம் பெயர்களுக்குச் சமமானது

அழகிய முகமுடையவனே ஸ்ரீராம ஓம் என வணக்கம்

28. பிரம்மா கூறினார்

முடிவற்றவரும் ஆயிரம் உருவம் கொண்டவரும் ஆயிரம் பாதங்களும் கண்களும் தலைகளும் தொடைகளும் தோள்களும் உடையவரும் ஆயிரம் பெயர்கள் உள்ளவரும் ஆயிரம் கோடி யுகங்களைத் தரிப்பவரும் ஆகிய என்றுமுள்ள புருஷருக்கு வணக்கம்

(ஆயிரம் கோடி யுகங்களை தரிப்பவரே ஓம் என வணக்கம் )

29. சஞ்சயர் கூறினார்
எங்கே யோகத்தின் தலைவரான கிருஷ்ணர் இருக்கிறாரோ எங்கே வில்லினை ஏந்திய அர்ஜுனன் இருக்கிறானோ அங்கே செல்வமும் வெற்றியும் நிச்சயமான நீதியும் (இருக்கும்) என்பது எனது கொள்கை

30. ஸ்ரீ பகவான் சொன்னார்

வேறு எதையும் நினைக்காமல் என்னை எவர்கள் ஆழ்ந்து வழிபடுகின்றனரோ அத்தகுதிபெற்ற நிலையான அவர்களுடைய யோக நலத்தை நான் தாங்குகிறேன்

31. பரித்ராணாய ஸாதூனாம்
விநாசாய ச துஷ்க்ருதாம் ।
தர்ம ஸம்ஸ்த்தாபனார்த்தாய
ஸம்பவாமி யுகே யுகே ॥ 31

32. ஆர்த்தா விஷண்ணா:
சிதிலாஸ்ச பீதா :
கோரேஷு சவ்யாதிஷு வர்த்தமானா: ।
ஸங்கீர்த்ய நாராயண
சப்த மாத்ரம்
விமுக்த து: கா:
ஸுகினோ பவந்து ॥ 32



32. நல்லோரைக் காப்பாற்றுவதற்காகவும் தீயோரை அழிப்பதற்காகவும் தருமத்தை நிலை நிறுத்தவதற்காகவும் ஒவ்வோரு யுகத்திலும் தோன்றுகின்றேன்

33. துன்புற்றோரும் ஏக்கமடைந்து மனமுடைந்தோரும் அச்சமடைந்தோரும் கொடிய நோய்களினால் பீடிக்கப் பட்டோரும் 'நாராயண' என்னும் சொல்லை மட்டும் போற்றிச் சொல்லி துயரங்களிலுருந்து விடுபட்டவர்களாய் இன்பமடைந்தவர்களாய் இருப்பார்களாக



*Co Sponsors for publication of this Book:*

**Sharva Shri /Smt.**

1. **P. Mohan Dass, M. Kalaimani & Family**
2. **Anitha & Arjun**
3. **Baby Harsh Vardhan**
4. **M. Amala**
5. **M. Aiswarya**

ஸ்ரீ :

# ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்

(அர்த்தத்துடன்)



ஸ்ரீ சந்தான லஷ்மி - முகப்பேர்

ஸ்ரீ சந்தான லஷ்மி — முகப்பேர்